# SYNOPSIS

OF

## EXPOSITION OF DIVINE WISDOM,

## Sivagnana Botha Churnikotthu.

BY

Panchatcharapuram

VALIANANTHASWAMIGAL

and rendered into English

BY

M. S. PURNALINGAM PILLAI, B.A., L.T.,

TRICHINOPOLY.

1928.

## SYNOPSIS

### OF

## EXPOSITION OF DIVINE WISDOM,

# "SIVAGNANA BOTHAM,"

## CHURNIKOTTHU.

---

### I. Chapter on Proof.

i. *SUTRA—Proof of existence of Pathi or Lord.

1. The Universe undergoes the three processes of Creation, Preservation and Destruction.

2. These are done by † Hara, The Destroyer.

3. The other two (Creator and Preserver) are also subject to these three processes.

---

* Sutra means epigram.

† Hara is known also as Siva, the Blissful one.

ii. SUTRA—Proof of existence of attachment or Pasa.

1. Hara with Souls coalesces into one entity.
2. Hara himself grants souls fruit of actions.
3. Souls reincarnate, changing forms.
4. Hara is omnipresent.

iii. SUTRA—Proof of existence of Pasu or Soul.

1. Soul exists, as it denies its entity consciously.
2. Soul is separate from body, for it claims the body as 'mine'.
3. As the knower of the five (five sensations) is but one, he is different from all the five senses, which can only feel, each a particular sensation.
4. As it passes from the dream condition into the waking state, there exists a soul different from the body in the dream condition.

5. As the body has no feelings or movement in profound sleep, though respiration is kept up, the soul is different from the vital air (Pranavayu).

6. Soul exists different from the ever-conscious Hara, as it often forgets and recollects.

7. Soul exists independent of individual ‡ Tatvas, as all Tatvas bear separate names.

---

## II. Chapter on Characteristics.

iv. SUTRA—Qualities of Pasu or Soul.

1. As the § Anthakarnas do not act unless in conjunction with the Soul, Soul exists independent of the Inner Powers.

2. Soul does not cognise under cloud of Malas or Passions.

3. Soul as three states (avasthas).

---

‡ Tatvas means component parts, physical and astral.

§ Anthakaranas are the Inner Powers.

v. SUTRA—Qualities of Pasa or attachment :

1. The Tatvas act with the aid of the Soul.

2. Souls cognise through Hara.

vi. SUTRA—Qualities of Pathi or Lord.

1. All things cognised by Soul-knowledge perish.

2. He who is known, though uncognisable by ordinary means or measures, is Hara.

---

## III. Chapter on Practice.

vii. SUTRA—What is entitled to enjoy the fruit of experiences or practices.

1. Hara has no experience of Pasa.

2. Pasa cannot enjoy Hara.

3. Soul can attain Hara and enjoy Him.

viii. SUTRA—What is known as means, the best aid or practices.

1. Soul gains wisdom only through Penance or Tapas.

2. Hara alone appears as soul's sagely master.

3. Soul knows not even itself as it deals with the five senses.

4. Soul will know itself if detached from the five senses.

ix. SUTRA—What the best method of Sadhana or Practices.

1. Soul can see Hara only through Hara's wisdom.

2. Hara will disclose Himself if the Soul be quite detached from passions or Pasas.

3. By constant meditation of Panchatchara (Five Letters) all traces of the former passions will disappear.

## IV. Chapter on Results.

x. SUTRA — Benefits of liberation of Bonds.

1. Be one with Hara.

2. Hold all your actions as those of Hara the Lord.

xi. SUTRA—Final Beatitude.

1. It is but Hara that enjoys the Sage's experiences.

2. If he has unfailing love for Hara, he will merge in Him.

xii. SUTRA—What transpires in the || Jivan Muktha state.

1. Get rid of the three malas.

2. Associate with Sivagnanis or Sages.

3. Worship Sivagnanis and ¶ Siva Lingams in the full belief that they are Siva Himself.

4. Denounce non-worship.

---

|| Jivan muktha is the person who has obtained liberation, or final Bliss even as he is in the human body, or one in Body-Soul-Bliss state.

¶ Sivalinga means the Emblem of Siva, the Lord.

உ

சிவமயம்.

# சிவஞானபோதச் சுருக்கம்.

---

இஃது

பஞ்சாட்சரபுரம்

உயர்திரு

வாலையானந்த சுவாமிகளால்

திரட்டி யெழுதப்பெற்று

---

சென்னை

திருவல்லிக்கேணி

சோல்டன் கம்பெனியாரால்

தமது பதிப்பகத்தில்

பதிக்கப்பெற்றது.

---

1928

# அட்டவணை.

| பொருள் | | பக்கம். |
|---|---|---|

| பொருள். | | பக்கம். |
|---|---|---|

உ

சிவமயம்.

# முகவுரை.

---

"ஓதுசம யங்கள்பொரு ளுணரு நூல்க
ளொன்றோடொன் றொவ்வாம லுளபலவுமிவற்றுள்
யாதுசம யம்பொருணூல் யாதிங் கென்னி
லிதுவாகு மதுவல்ல தெனும்பிணக்க தின்றி
நீதியினா லிவையெல்லா மோரிடத்தே காண
நின்றதியா தொருசமய மதுசமயம் பொருணூ
லாதலினா லிவையெல்லா மருமறையா கமத்தே
யடங்கியிடு மிவையிரண்டு மரனடிக்கீ ழடங்கும்.
சித்தாந்தத் தேசிவன்றன் றிருக்கடைக்கண் சேர்த்திச்
செனனமொன்றி லேசீவன் முத்தராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞானவாரி
மடுத்தானந் தம்பொழிந்து வரும்பிறப்பை யறுத்து
முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்ப னென்று
மொழிந்திடவு முலகரெல்லா மூர்க்க ராகிப்
பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்
பெருங்குழியில் வீழ்ந்திடுவ ரிதுவென்ன பிராந்தி."

ஒரு வித்தியாசாலையில் கல்வி பயில்கின்ற மாணவர்களிடத்து நடுநிலை திறம்பாத தலைமை ஆசிரியருக்கு பொதுவாக ஒரே தன்மையான அன்பு உண்டு என்பதை யாரும் மறுக்கமாட்டார்கள். அவ்வாறிருக்கவும் அவர் வித்தியாசாலையில் மாணவர்களுக்கெல்லாம் ஒரே வகுப்பும் ஒரே பாடமும் ஒரே பயனும் அமைக்கக் காணவில்லை ; பல வகுப்புக்களையும் அவற்றிற்கேற்ற பலவாசிரியர்களையும் பலபேதமான பாடங்களையும் பல பேதமான பயன்களையும் அமைத்திருக்கின்றார். அதனால் அவர் தமது நீதியிலாவது அன்பு நிலையிலாவது மாணவர்களுக்குப் பிழைபடவில்லை என்பதும் அவ்வேற்றுமைக்குக் காரணம் மாணவர்களின் அறிவு தாரதம்மியமே என்பதும் மறுக்க முடியாத உண்மை.

அதைப்போலவே கடவுளாகிய தலைமை ஆசிரியர் உயிர்களாகிய மாணவர்களுக்கு உலகமாகிய வித்தியாசாலையில் பல சமயங்களாகிய வகுப்புக்களையும் பல சமயத்தலைவர்களாகிய வகுப்பாசிரியர்களையும் பலசமயநூல்களாகிய பாடங்களையும் பலமுத்தி நிலைகளாகிய பயன்களையும் அமைத்திருக்கின்றார். உயிர்கள் தமது பக்குவ நிலைக்கேற்ப அவ்வவற்றிற் சேர்க்கப்படும். சமயங்களனைத்தும் சமயநூல்களனைத்தும் கடவு

ளருளாலே அமைக்கப்பட்டனவே. அங்ஙன மாயினும் முடிந்த பயனைப்போதிக்கின்ற ஒன்று இருக்கவேண்டுவது முக்கியமன்ரே. இக்காலத்தில் சிலர் எண்ணுவதுபோல் எந்த சமயத்தில் நின்ருலும் உயிர்கள் ஒரே உன்னத நிலையை அடைவதில்லை. எல்லா உயிர்களுக்கும் அறிவு ஒரே தன்மையாக வில்லாமையாலும் எல்லாச் சமயங்களும் ஒரே தன்மையான ஒழுக்கத்தையும் ஞானத்தையும் முத்திநிலையையும் போதிக்காமையாலும் அவற்றைச் சார்ந்த உயிர்கள் ஒரே நிலையை எப்படி அடையமுடியும்? ஆகையால் சமயங்களைப்போலவே சமயமுத்திகளும் பேதமுறுகின்றன. அங்ஙனமாயின் எது முடிந்த சமயம்? எது முடிந்த கொள்கை? எது முடிந்த பயன்? என்ற ஐயம் நிகழுமன்ரே. அதை மேலே காட்டிய இரண்டு செய்யுட்களாலும் நீக்கிக்கொள்ளலாம். சுருக்கிக்கூறுமிடத்து எல்லாச் சமயக் கொள்கைகளும் தன்னிடத்தமையப் பெற்று, தனது சிறந்த கொள்கை அவற்றில் அமையப்பெருமலிருக்கின்ற சமயம் ஒன்றுண்டாயின் அதுவே சிறந்த சமயமாகும். அதுவே சித்தாந்த சைவமென வழங்கப்பெறுவது.

சமயபேதங்களையும் அவற்றின் கொள்கைகளையும் முத்திநிலைகளையும் அறியாதிருந்தால்

சித்தாந்த சைவ சமயத்தின் சிறப்பைத் தெளிவாக அறியமுடியாதாகையால் இரண்டாவது பதிப்பாகிய இந்தப்பதிப்பில் சுருக்கமாக அவைகளை விளக்கிக் காட்டியிருக்கின்றேன். சமயக் கொள்கைகளை விரிவாக விளக்குவதானால் பலபுத்தகங்களை எழுதநேரும்; படிப்பவர்களுக்கும் மலைவுதரும் என்றஞ்சிச் சுருக்கமாக எழுதியிருக்கின்றேன்.

சமயநூல்கள் பிற்காலத்தில் வெளிவந்த வரலாறுகளை ஒருவாறு கூறுகின்றேன் :—

தேவகுருவாகிய பிரகற்பதி பகவான் தேவேந்திரனை முன்னிட்டு ஒருகாலத்தில் சமயோசிதமாய் உலோகாயத நூலைச் செய்து போதித்தார். மாயோன் புத்தவேடங்கொண்டு திரிபுரத் தசுரர்பாற்சென்று அவரை மயக்கிக் கெடுக்கும்பொருட்டு பிடக நூலைச்செய்து போதித்தார். அது ஆதிபுத்தர் முதலாக பலர் வாயிலாக உலகத்தில் பரவியது. அருகர் எனும் ஒருவர் ஆருகத நூலை உலகத்திலே போதித்தார். அதைத் தழுவினோர் சமணர் எனப்பட்டனர். உலோகாயதர் பௌத்தர் சமணர் ஆகிய மூவரும் ஆசாரமில்லாத நாத்திகர்கள். இவர்கள் ஈசுரன் என அநாதிப் பொருள் ஒன்றில்லை

என்பர். இவர்கள் வேதசிவாகமங்களை ஒப்புக் கொள்வதில்லை.

இனி வேதத்தைத் தழுவிய மதங்கள் தருக்கம் மீமாஞ்சை ஏகான்மவாதம் சாங்கியம் யோகம் பாஞ்சராத்திரம் என ஆறுவகைப்படும், அவற்றில் தருக்கத்தின் பிரிவாகிய வைசேடிக நூலை கணாதமுனிவரும் நியாயநூலை அக்கபாதமுனிவரும்செய்து போதித்தார்கள். வேதத்தின் கன்மகாண்டத்தையே தழுவி மீமாஞ்சை நூலை சைமினிமுனிவர் இயற்றிப் போதித்தார். மாயாவாதம் பாற்கரிய வாதம் கிரீடாப் பிரமவாதம் சத்தப்பிரமவாதம் எனும் நால்வகைப் பிரிவுகளையுடைய ஏகான்மவாதமாகிய வேதாந்த நூலை வியாசபகவான் போதித்தார். வேதத்தின் ஞானகாண்டத்தைத் தழுவி சாங்கிய நூலை கபில முனிவர் போதித்தார். யோகமதநூலாகிய பாதஞ்சல நூலை பதஞ்சலி பகவான் இயற்றிப் போதித்தார். பாஞ்சராத்திர நூலை வாசுதேவன் இயற்றிப் போதித்தார்.

மனுமுதலிய இருடியர், வேத விதிகளைப் பற்றி பிராமணம் முதலிய சாதிகளையும் பிரமசரியம் முதலிய ஆச்சிரமங்களையும் விதிப்பதும், உபநிடதங்களைப்பற்றி பிரகிருதி புருடன் ஈசுரன்

இலக்கணங்களைக் கூறுவதும், ஒழுக்கம வழுக்கு தண்டனைகளை விதிப்பதுமாகிய ஸ்மிருதி நூல் களைச் செய்தனர். இவையிற்றையே பிரமாண மாகத்தழுவியோர் ஸ்மார்த்தர் எனப்பட்டனர். வியாசபகவான் பதினெண் புராணங்களை யியற் றிப் போதித்தார். அவைகளையும் பாஞ்சராத் திர நூலையும் தழுவினோர் பௌராணிகர் எனப் பட்டனர்.

இனி மாயா தத்துவத்தில் வசிக்கும் உருத் திரர் ஒருவர் பாசுபதமத நூலை யியற்றினர். வித்தை எனும் தத்துவத்திலிருக்கின்ற உருத் திரர் ஒருவர் மாவிரதமத நூலையியற்றிப் போதித் தார். காலதத்துவத்திலிருக்கும் உருத்திரர் ஒருவர் காபாலமதத்தைப் போதித்தார். பரம சிவன் அனுக்கிரகம் பெற்ற விஞ்ஞானகலரில் ஒரு வராகிய வாமதேவசிவர் வாமநூலை இயற்றிப் போதித்தார்.

இவ்வாறு உலோகாயத முதல் சுத்த சைவ மீருகிய சமயங்கள் சோபானக் கிரமமாக ஏற் பட்டன. இவற்ருல் விளையும் ஞானங்கள் பாச ஞான பசுஞான பதிஞானங்களாகும். இவற்றின் பயன்கள் அரிவைய ரின்புறு முத்தி முதலிய

கேவல முத்திகளும், பதமுத்திகளும் அபர முத்திகளுமாம்.

இவைகளுக்கு அதீதமானது சித்தாந்த முத்தி. இதை அடையும் நெறியைப் போதிக்கும் சமயம் சித்தாந்த சைவம். அதற்குரிய நூல்கள் வேத சிவாகமங்களாயினும் அவற்றின் சாரத்தினும் சாரமாயுள்ளது சிவஞான போதமாகும்.

வேதம்பசு வதன்பால் மெய் யாகமநால்வ
ரோதுதமி ழதனுள்ளூறு நெய்—போதமிகு
நெய்யினுறு சுவையாநீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்த தமிழ் நூலின் றிறம்

இத்தகைய சிறப்பு வாய்ந்த சிவஞான போதம் யாவரும் எளிதினுணருமாறு சுருக்கமாக இருக்கவேண்டுமென்ற பேரவாவினல்வெளியிடப் பட்ட இந்நூலிற்கண்ட பிழைகளையும் அவற்றின் திருத்தங்களையும் அறிவித்தால் மறுபதிப்பில் வெளியிடுவேன்.

" தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்."

பஞ்சாட்சரபுரம்,
வாலேயானந்தம்.

சிவமயம்.

# சிவஞான போதச் சுருக்கம்.

---

### காப்பு.

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

### சந்தான குரவர் துதி.

சிவஞான போதமருள் திருவெண்ணெய்
மெய்கண்டார் திருத்தாள் போற்றி
சிவஞான சித்தியருள் திருத்துறையூ
ரருணந்தி சிவன்றாள் போற்றி
தவஞான நிறைகடந்தை மறைஞான
சம்பந்தர் சரணம் போற்றி
நவஞான நான்முறைக ணவிறில்லை
யுமாபதியார் நற்றாள் போற்றி.

---

## சமய பேத விளக்கம்.

ஆன்மாக்கள் அநாதியாய் உள்ளவை. அவை எண்ணில்லாதன. அவைகளுக்கு அறிவிச்சை செயல்கள் இயல்பாகவே உள்ளன. அவைகளை அநாதியே பலதிறப்படத் தடை செய்திருப்பது ஆணவம். அவைகள் மாயையில் வசிக்கின்றன.

கடவுள் கைம்மாறற்ற பேரருளால் ஆன்மாக்களின் பந்தத்தை நீக்கச் சிருஷ்டியாதி ஐந்தொழிலி யற்றுகின்றனர். அவர் மாயையினின்றும் தனுகர ணாதிகளைத் தமது சக்தியால் தோற்றுவித்து ஆன்மாக்களுக்கு உதவுகின்றார். அவைகளின் உதவியால் உயிர்களுக்கு அறிவிச்சை செயல்கள் முறை முறையாக விளங்கப்பெறும். அங்ஙனம் விளங்கப்பெறுகின்றபோது உயிர்கள் பல இன்ப நிலைகளை அடைகின்றன. அவைகளை அடைதற்கு ஏற்ற வழிகளே சமயங்கள்.

சமயங்கள் :—புறப்புறச்சமயங்கள், புறச்சம யங்கள், அகப்புறச்சமயங்கள், அகச்சமயங்கள் என நால்வகைப்படும்.

புறப்புறச் சமயங்கள் வேத சிவாகமங்களாகிய ஆதி நூல்களைப் பிரமாணமாகக் கொள்ளா. புறச்சமயங்கள் வேதத்தை உடம்பட்டு சிவாக மத்தைப் பிரமாணமாகக் கொள்ளா. அகப் புறச் சமயங்கள் வேத சிவாகமங்களை உடம் பட்டு அவற்றோடு அவைகளுக்கு விரோதமான பசு நூல்களையும் பிரமாணமாகக் கொள்ளும். அகச் சமயங்கள் வேத சிவாகமங்களையே முக்கிய பிரமாணமாகக் கொண்டு முத்தி நிலைகளில் மாறு படும்.

புறப்புறச்சமயங்களாவன :— உலோகாயதம் நால்வகைப்பௌத்தம், ஆருகதம் என ஆறு. உலோகாயதத்தில், தேகான்மவாதம், இந்திரியான்மவாதம், சூக்கும தேகான்மவாதம், பிராணான்மவாதம், தத்துவ சமூகான்மவாதம், அந்தக்கரணான்ம வாதம் முதலிய உட்பிரிவுகளுண்டு.

நால்வகைப் பௌத்தமாவது மாத்தியமிகம், யோகாசாரம், சௌத்திராந்திகம், வைபாடிகம் என்பனவாம்.

ஆருகதத்தில் நிகண்டாவாதமெனும் உட்பிரிவுண்டு. சூன்யான்மவாதமும், ஏசுமதம் மகம்மதிய மதம் முதலிய புதிய மதங்கள் பலவும் புறப்புறச் சமயங்களில் அடங்கும்.

புறச்சமயங்களாவன :—தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் என ஆறு.

தருக்கத்தில் வைசேடிகம், நையாயிகம் எனும் உட்பிரிவுகளுண்டு. மீமாஞ்சையில் பட்டமதம், பிரபாகரமதம் எனும் உட்பிரிவுகளுண்டு.

ஏகான்மவாதத்தில் மாயாவாதம், பாற்கரியவாதம், கிரீடாப்பிரமவாதம், சத்தப்பிரமவாதம் எனும் உட்பிரிவுகளுண்டு.

**அகப்புறச் சமயங்களாவன** :—பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், ஐக்கிய வாதசைவம் என ஆறு.

அநேகேசுரவாதம் அகப்புறச் சமயங்களில் அடங்கும்.

**அகச்சமயங்களாவன**:—பாடாணவாதசைவம், பேதவாதசைவம், சிவசமவாதசைவம், சிவசங்கிராந்தவாதசைவம், ஈசுரவவிகாரவாதசைவம், சிவாத்துவிதவாதசைவம் என ஆறு.

---

## புறப்புறச் சமயங்கள்.

### உலோகாயதம்.

உலோகாயதமாவது:—காட்சி அளவை ஒன்றே பிரமாணம். அதற்கெய்தாது உரைப்பன வெல்லாம் பிரமாணமாகா. காணப்படும் நிலம், நீர், தீ, வளி எனும் நான்கே தத்துவங்கள். இவை நித்தப்பொருள்கள். இவற்றின் சேர்க்கையாலாவதே உடம்பு. மண் முதலிய நான்கு பூதங்களின் சேர்க்கையில் ஓரறிவுண்டாகும். அவ்வறிவு உடம்பு வளர வளரும், தேயத்தேயும். உடம்பிற்கு இன்ப துன்பங்கள் இயல்பாயுள்ளன. ஆகலின் உடம்பிற்கு வேறு உயிரென்பதும், இன்பதுன்பங்களுக்குக் காரணம் வினையென்

பதும், உடம்போடு உயிரைக்கூட்டி வினைக்கீடான இன்பதுன்பங்களைக் கொடுத்தற்கு ஒரு கடவுள் உண்டென்பதும் பொய். அரசனாணைக்கு இசைய நடந்து, மங்கைப் பருவத்து மகளிரை மணந்து வாழ்வதே வாழ்க்கை. மகளிரது ஊடலை உணர்வதும், அதைத்தீர்க்குமாற்றை அறிவதுமே கல்வி. ஊடிய மகளிரை யெண்ணி உடல் மெலிவதும், ஊடல் நீங்கும்பொருட்டு அவரடியில் வீழ்ந்து வருந்திப் பிரார்த்திப்பதுமே தவம். ஊடல் நீங்கிய மகளிரைக்கூடி வேட்கையே வடிவாய் வேறோருணர்ச்சியுமின்றி இன்புறுவதே முத்தி. இங்ஙனம் இன்புற்று வாழ்வாரே சீவன் முத்தர் என்பதாம்.

உலோகாயதம் சாருவாகம் எனவும் காட்சிவாதம் எனவும் பெயர் பெறும்.

## தேகான்மவாதம்.

தேகான்மவாதமாவது :—அறிவு உடம்பின் கண் அன்றி நிகழக்காணவில்லை. நான் மெலிந்தேன், நான் பருத்தேன் என உடம்பினையே நான் என வழங்கக் காண்கின்றோம்; ஆதலின் தேகத்தின் வேறாய் ஆன்மாவென ஒன்றில்லை; தேகமே ஆன்மா என்பதாம்.

## இந்திரியான்மவாதம்.

இந்திரியான்ம வாதமாவது :—மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து இந்திரியங்களே சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றங்களாகிய விடயங்களை அறிந்து அநுபவிக்கின்றன. ஆகலின் அவ்விந்திரியங்களே ஆன்மா ; அவற்றிற்கு வேறாய் உயிரென ஒன்றில்லை என்பதாம்.

## சூக்குமதேகான்மவாதம்.

சூக்குமதேகான்ம வாதமாவது :—புரியட்டகவுடம்பாகிய சூக்கும தேகமே அகத்தே நின்று இந்திரியங்களைப் புறத்திற் செலுத்திப் புலன்களை அறிகின்றதனால் சூக்குமதேகமே ஆன்மா என்பதாம்.

## பிராணான்மவாதம்.

பிராணான்மவாதமாவது:—பிராணவாயு உடம்பிற் கூடிநின்றியங்கும்போது உடம்பிற் புசிப்பும் தொழிலும் நிகழ்கின்றன; பிரிந்தபோது புசிப்புந் தொழிலும் நிகழாமல் உணர்ச்சியற்று உடம்பு முருடாய்க் கிடக்கின்றது. ஆகலின் சொப்பனத்தான மாத்திரையினன்றித் தொழிற்படாத சூக்கும தேகம் போலன்றிச் சுழுத்தித்தானம் துரியத்தானங்களினும் தொழிற்படுவதாகிய பிராணவாயுவே உயிர் என்பதாம்.

## தத்துவசமூகான்மவாதம்.

*தத்துவசமூகான்மவாதம்* :—உடம்பு, சூக்கும வுடம்பு, இந்திரியங்கள், பிராணவாயு முதலியவற்றுள் ஒன்று குறைந்த வழியும் அறிவு நிகழாமையானும் எல்லாங்கூடிய வழி அது நிகழ்தலானும் அவை அனைத்துங்கூடிய சமுதாயமே ஆன்மா என்பதாம்.

## அந்தக்கரணான்மவாதம்.

*அந்தக்கரணான்மவாதம்* :—ஏனைய கருவிகளெல்லாம் வெவ்வேறு பெயர் பெற்று நிற்பனவாகலான் உயிராகாவாயினும் மன முதலிய அந்தக்கரணங்கள் "சிந்தையைச் சீவனென்றும் சீவனைச் சிந்தை யென்றும்" கூறு முறைபற்றி உயிரென்னும் பெயரானும் வழங்கப்படுதலான் அந்தக்கரணமே ஆன்மா என்பதாம்.

## பௌத்தம்.

*பௌத்தமாவது* :—உலகம் உள்ளதாயின் உள்ளதற்கு உண்டாக வேண்டுவதில்லையாகலாற் சற்காரியவாதம் அடாது. ஞானமே ஆன்மா, அது நீரோட்டம்போலச் சந்தானமாய்க் கணந்தோறுந் தோன்றி யழியும். அங்ஙனம் தோன்றி யழியுங்கால் மான்மத நாற்றம்போல, முற்கணத்தின் அழி வெய்தும் ஞானத்திற்

றோன்றிய வாசனை பிற்கணத்திற் றோன்றும் ஞானத்திற் பற்றுதலான் அறிவு முதலாயின நிகழும். மற்றுமுள பொருள்களெல்லாம் கணந் தோறும் தோன்றி அழியும். இந்த ஞானத்திற் றோன்றிய வாசனை அழிவதே முத்தி என்பதாம். ஞானங்கூடக் கெடுதல் முத்தி யென்பாருமுளர்.

பௌத்தம் கணபங்கவாதம் எனவும் பெயர் பெறும்.

இப்பௌத்த மதத்தர் மாத்தியமிகர், யோகாசாரர், சௌத்திராந்திகர், வைபாடிகர் என நால்வகைப்படுவர். இவர்கள் ஆதி புத்தனுடைய மாணுக்கர் நால்வர்களாகிய மாத்தியமிகர் முதலியோரால் நிறுவப்பட்ட மதங்களை யநுட்டிப்பவர்கள்.

## மாத்தியமிகம்.

மாத்தியமிகமாவது :—உலகத்துப் பொருள்கள் உள்பொருளாயின் அழியா; இல்பொருளாயின் தோன்ற ; உள்ளவுமில்லவுமாமெனின் முரணும். இரண்டுமல்லவெனின் உணர்ச்சி கூடா ; ஆகலின் இந்நான்கு பகுதியுமின்மையின் எல்லாப் பொருளுஞ் சூனியமே. அவைகள் மயக்கத்தாற் காட்சிப்பொருள் போலப் புலப்படுகின்றன என்பதாம்.

இவ்வாறு ஆசிரியன் பிடக நூற்பொருள் உணர்த்திய வழி அதனை உண்மையாகக் கொண்டு மேல் வினவாது நிற்றலின் வந்த பெயர் மாத்தியமிகம்.

அஃதாமாறு:—ஆசிரியன் மொழிந்தது பொருளெனக் கோடலிற் றலைமாணாக்கர் அதற்குமேல் வினா நிகழ்த்தாமையிற் கடை மாணாக்கர் என இரண்டும் ஒருங்குற்று நின்றமையின் மத்திய மாணாக்கராய் மாத்தியமிகர் எனப் பெயர் பெற்றார்.

மாத்தியமிகம் சூனியவாதம் எனவும் பெயர் பெறும்.

## யோகாசாரம்.

யோகாசாரமாவது :- உலகத்துப் பொருள்களில் புறப்பொருள்களெல்லாம் சூனியம், ஞானம் சூனியமன்று. ஞானம் உள்ளது. அது சாகாரம் நிராகாரம் என இருவகைப்படும். சாகார ஞானமாவது வட்டம், சதுரம், கறுப்பு, சிவப்பு முதலிய வடிவிற்றாய் அகத்தேதோன்றும் ஞானம். நிராகார ஞானமாவது பந்தம் நீங்கியவழி அங்ஙனம் வேறுபாடின்றித் தொடர்ச்சியாய் எழுவதாகிய ஞானம். இத்தன்மைத்தாகிய ஞானமேயன்றிப் பொருளென வேறில்லை என்பதாம்.

பௌத்தமத வாசிரியன் மொழி உடம்படுதலை ஆசாரம் எனவும் அதற்குமேல் வினவுதலை யோகம் எனவும் குறியிட்டு வழங்குப வாகலான், அவ்விரண்டானும் பெற்ற பெயர் யோகாசார மென்பதாம்.

அஃதாமாறு :—உலகத்துப் பொருள்களெல்லாம் சூன்யமென ஆசிரியன் உணர்த்தியவழி புறப்பொருள் பாழென்பதனை உடம்பட்டு, ஞானமும் சூனியமெனின் வழங்கற்பாடு கூடாதன்றே என வினவினர்க்கு, நன்றே வினவினீர்! ஞானமே உள்ளது; வழங்கக் காண்டலான். நனவின்கண் வழங்குவதும் அவ்வாறே யாம். அவ்வுணர்வு அகத்தின் நிகழ்வதே யாயினும், அநாதி வாசனை வயத்தாற் புறத்தே காணப்படுவது போலத் தோன்றா நின்றது என ஆசிரியன் உணர்த்தினான். இவ்வாறு ஆசிரியன் மொழிந்ததனை உடம்பட்டு அதற்குமேல் வினவினராகலின் யோகாசாரரென் றாயினர்.

யோகாசாரம் விஞ்ஞானவாதம் எனவும் பெயர் பெறும்.

### சௌத்திராந்திகம்.

சௌத்திராந்திகமாவது :—உலகத்துப் பொருள்களில் அகத்துப் பொருள்களைப் போல

புறத்துத் தோன்றுவனவும் உள்பொருள்களே யாம். ஆனால் அவை காட்சிப்பொருள்களன்று. கணத்திற்றோன்றி யழியும் பொருள்கள் தத்தம் வடிவினை ஞானத்தின் வைத்திட்டழியும். ஞானத் துட் பற்றிய வடிவானே அங்ஙனம் அழிந்த பொருள்கள் வழியளவையின் வைத்து உணரப் படும். இவற்றிற்குக் காரணம் புறம், அகமெனும் இருவகைச் சமுதாயங்களாம். புறச்சமுதாயம் நிலம் முதலாயின. அவற்றிற்குக் காரணம் பர மாணுக்கள். அகச்சமுதாயம் சித்தமும் சித்தப் பகுதியுமாம். அவற்றிற்குக் காரணம் ஐவகைப் படுங் கந்தங்கள். அவை நாற்பத்து மூன்று வகை யாக எண்ணப்பட்ட உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் என்பனவாம். கந்தம் என்பது சமூகம். உலகம் முழுதும் இவ்விருவகைச் சமுதாயங்களுள் அடங்கும். இவற்றிற்கு வேறாய் ஆன்மாவில்லை. இவைகளே பந்த துக்க மாவன. ஐவகைக் கந்தங்களும் அறக்கெடுவதே முத்தி யென்பதாம்.

நாற்பத்து மூன்று வகையான கந்தங்களா வன :—உருவகந்தம் எட்டு, வேதனை கந்தம் மூன்று, குறிப்பு கந்தம் ஆறு, பாவனை கந்தம்

இருபது, விஞ்ஞானகந்தம் ஆறு, ஆக நாற்பத்து மூன்று.

உருவகந்தம் எட்டாவன :—பிருதிவி, அப்பு, தேயு, வாயு என்கிற பூதம் நாலும், வலி, கந்தம், இரதம், வன்னம், என்கிற உபாதான ரூபம் நாலும் ஆக எட்டு.

வேதனைகந்தம் மூன்றுவன:—குசலா வேதனை, அகுசலா வேதனை, குசலாகுசலா வேதனை என மூன்று.

குறிப்பு கந்தம் ஆறுவன :—சோத்திரம், துவக்கு, சட்சு, சிங்நுவை, ஆக்கிராணம், மனம் என ஆறு.

பாவனைகந்தம் இருபதாவன :—தீக்குணம் பத்தும், நற்குணம் பத்தும் என இருபது.

தீக்குணம் பத்தாவன :—பொய் சொல்லல், கோட்சொல்லல், கோபித்துச்சொல்லல், பயனில சொல்லல் என்கிற வாக்கின் குணம் நாலும், களவுக்குப்போதல், வறிதே தொழில்செய்தல், கொலை செய்தல் என்கிற காயத்தின் குணம் மூன்றும், கொலை நினைக்கை, காமப்பற்று, ஆசையென்கிற மனத்தின் குணம் மூன்றும் ஆக தீக்குணம் பத்து.

நற்குணம் பத்தாவன :—மெய்யுரை, நல் வார்த்தை, இனியன கூறல், பயன்படுவன சொல் லல் என்கிற வாக்கின் குணம் நாலும், பள்ளி வலம் வருதல், தவம்புரிதல், தானஞ்செய்கை என்கிற காயத்தின் குணம் மூன்றும், அருணி னைவு, ஆசையறுத்தல், தவப்பற்று என்கிற மனத் தின் குணம் மூன்றும் ஆக நற்குணம் பத்து.

விஞ்ஞான கந்தம் ஆறுவன :—சத்தம், பரி சம், உருவம், இரதம், கந்தம், சித்தம், என்கிற ஆறுமாம்.

இனி சௌத்திராந்திக மென்பது, புறப் பொருள்கள் சூனியமென ஆசிரியன் உணர்த்திய வழி, யான் இது கண்டே னென்று உணர்வுழி, யான் என்னும் ஞானம் அகத்துப்பொருளும் இது என்று சுட்டியறியப்படுவது புறத்துப் பொருளுமாகலின் அவற்றிற்கு வேறுபாடு விளங்குகின்றமையின், புறப்பொருள்களெல்லாம் சூனிய மென்பதென்னை ? என வினையினர்க்கு, நன்றே வினயினீர் ! புறத்துத் தோன்றுவனவும் உள்பொருள்களேயாம். ஆனல் அவை காட்சிப் பொருள்களன்று. ஞானத்துட் பற்றிய வடி வானே வழியளவையின் வைத்து உணரப்படும் என ஆசிரியன் உணர்த்தினன். அது கேட்ட மாணக்கர், இங்ஙனம் மாணக்கர் வினவிய வினு

விற்கேற்ப அறிவுறுக்குஞ் சூத்திரங்கள் எவ்வள வின் முடிவுபெறும் எனக் கடாயினூர். அவ்வழி ஆசிரியன் சூத்திராந்தம் கடாவிய நீர் சௌத் திராந்திகர் எனப்பெயர் பெறுக என்றமையின் வந்த பெயர்.

சௌத்திராந்திகத்துக்குச் சமுதாய வாதம் எனவும், பரமாணு காரண வாதம் எனவும் பெயர்கள் உண்டு.

## வைபாடிகம்.

வைபாடிகமாவது :— சௌத்திராந்திகத்திற் கூறியவாறு கொண்டு, புறப்பொருள் ஞானத் தால் அநுமித்தறியற்பாற்றன்று, புறப்பொருள் காட்சிப் பொருளே என்பதாம்.

வைபாடிகமென்பது, புறப்பொருள் வழி யளவையான் உணரப்படும் என ஆசிரியன் உணர்த்திய வழி, அதனை உடம்படாது, ஞானம் தமக்குக் காட்சிப்பொருளாகலானும், காட்சிப் பொருள் ஒன்றுமின்றாயின் நியதமான உட னிகழ்ச்சி யுணர்ச்சிக்கு இடமின்மையான் வழி யளவை நிகழாதாகலானும், இது மாறுகோளுரை போலும் என வினவியதால் வந்தபெயர். மாறு கோளுரை எனினும் விபாடை எனினும் பொருந் தும்.

வைபாடிகத்துக்கும் சமுதாயவாதம் பரமாணு காரணவாத மெனும் பெயர்களுமுண்டு.

## ஆருகதம்.

ஆருகதமாவது :—சீவன், அசீவன், ஆச்சிரவம், சமுவரம், நிர்ச்சரம், பந்தம், வீடு எனப் பதார்த்தங்கள் ஏழுள. சீவன் அநாதி சித்தன், முத்தன், பெத்தன் என மூவகைப்படும். அநாதி சித்தன் அருகக்கடவுள். முத்தன் மோகம் முதலிய பந்தத்தின் நீங்கினவன். பெத்தன் அவற்றுட் கட்டுண்டவன். இச்சீவன் எடுத்த உடம்பளவின் வியாபகமாய் உடம்புதோறும் வெவ்வேறும். சீவன் மோகம் முதலியவற்றின் நீங்கிச் சுதந்தரம் பெற்று அநந்தஞான முதலிய அட்ட குணங்களை அடைந்து உலகங்கடந்து எல்லையின்றி உளதாகிய ஆகாயத்தில் மேனோக்கிச் சேர்ந்து மேலெல்லைக்கண் இருப்பதுவே முத்தி என்பதாம். இது அட்டகுண முத்தி எனப் பெறும்.

ஆருகதத்துக்குச் சைனம், சமணம், பரமாணு காரணவாதம், அநேகாந்த வாதம் எனும் பெயர்களுண்டு.

அநேகாந்தமாவது:—வினவிற்கெல்லாம்விடை யிறுப்புழி, உண்டாம், இல்லையாம், உண்டுமில்லையு மாம், சொல்லொணாததாம், உண்டுமாஞ் சொல் லொணாததுமாம், இல்லையுமாஞ் சொல்லொணா ததுமாம், உண்டுமில்லையுமாஞ் சொல்லொணாதது மாம் என ஏழு வகையான் இறுத்தல். இல்லதும் உள்ளதுமாய பொருள் தோன்றுமென்பது அநே காந்தவாதி கொள்கை.

## நிகண்டாவாதம்.

நிகண்டாவாதமாவது :—ஞானவாணியம், தரி சன வாணியம், வேதினீயம், மோகனீயம், ஆயுசு, நாமம், கோத்திரம், அந்தராயம் என்கிற குணங் கள் எட்டும், பசித்தல், தாகம், பயம், செற்றல், உவகை, மோகம், சிந்தனை, பழித்தல், நோய், நசித்தல், வேர்வை, கேதம், மதம், வேண்டல், அதிசயித்தல், உருசிப்பு, பிறப்பு, உறக்கம் என் கிற குணங்கள் பதினெட்டும், அரசிகம், இரதி, அரதி, சோகம், சுகுச்சை, பயம் என்கிற குணங் களாறும், ஆக விங்ஙனஞ் சொல்லப்பட்டு வரு கிற மூவகைக் குணங்களையும் விட்டுப் பூர்வ கன்மத்திலுண்டாகிய கன்மங்களையும் புசித் தொழிந்த அவதரந்தானே வீட்டின்ப மென்ப தாம். ஆகையால் மேற்கூறிய முக்குணங்கள் கெடுவதே முத்தியெனப்படும்.

### சூன்யான்மவாதம்.

சூன்யான்மவாதமாவது:—இல்லதும் உள்ளதும் அல்லாத பொருள் தோன்றும். ஆகவின் சூன்யமே ஆன்மா என்பதாம்.

---

## புறச்சமயங்கள்.

### தருக்கம்.

தருக்கமானது வைசேடிகம், நையாயிகம் என இரு வகைப்படும்.

### வைசேடிகம்.

வைசேடிகமாவது:—திரவியம், குணம், தொழில், சாதி, விசேடம், சமவாயம், இன்மையெனப் பதார்த்தங்கள் ஏழு வகைப்படும். அவைகளின் சிறப்பியல்பு பொதுவியல்பு வேற்றியல்புகளை உணரவே உடம்பு முதலியவற்றின் வேறாகிய ஆன்மாவின் இயல்பு விளங்கும். விளங்கவே, உடம்பு முதலியவற்றை நானென்று எண்ணிய மித்தையுணர்வு கழியும். அதனால் முயற்சியின்மையின் அறம்பாவங்களில்லையாய்ப் பிறவி ஒழியும். ஒழியவே வரக்கடவனவாகிய துன்பங்களின்மையின், உடம்பு முகந்துகொண்ட வினைப்பயன் நுகர்ச்சியாற் கழிவுழி இறுதித் துன்பங்கெட்டு மனத்தோடு கூடுதற் கேதுவின்

மையின் அறிவின்றிப் பாடாணம்போற் கிடப்பதே முத்தி என்பதாம்.

## நையாயிகம்.

நையாயாயிகமாவது:—வைசேடிக நூலிற் கூறியவற்றைச் சிறுபான்மை வேறுபடுத்திப் பிரமாணம் பிரமேயம் முதலாகப் பதினாறுவகையான் விரித்துக் கூறி முத்தியில் ஆனந்தம் உண்டு என்பதாம்.

நையாயிகர் பொருட்குச் சத்தி வேறன்றென்றும், பிரபஞ்சத்தைப்போல முதல்வனும் அளவைகளான் அளந்தறி பொருளேயன்றி முதல்வனை வாக்கு மனாதீதன் என்றல் பொருந்தாதென்றும், ஞானத்தை உணர்த்துவார் கலைஞானங்களை உணர்த்துவாரைப்போல நம்மனோரில் ஒருவராதல் அமையுமென்றுங் கூறுவர்,

இவ்விருவரும் கணபங்கங் கூறுவர். இவர்கள் பரமாணுகாரணவாதிகளாவர்.

தார்க்கிகர் வேதத்தைப் பாதப்பிரமாணமாகவும், பரமான்மாவைச் சகுணப் பொருளாகவும் கொள்வர்.

## மீமாஞ்சை.

மீமாஞ்சையாவது:—வேதம் ஒருவராற் செய்யப்பட்டதன்று; அநாதியே சுயம்புவா யுள்ளது.

ஆகலின் வேதம் பிரமாணமாகும். அது விதியும், புனைந்துரையும், மந்திரமும், குறியீடும் என நான்கு வகைப்படும். அவற்றுள் விதி அங்கியும் ஏனை மூன்றும் விதிக்கு அங்கமுமாம். விதி வாக்கியம் விதித்தலும் விலக்குதலும் என இரு வகைப்படும். அவைபற்றிச் செய்யும் வினையும், அறமும் பாவமும் என இருதிறப்படும். வினை செய்தவர்க்கு வினையே துறக்கம் முதலிய பயன்களை உதவும். காமியவினை காமியப் பயனைக் கொடுக்கும். நிஷ்காமியவினை முத்தியைக் கொடுக்கும். ஆன்மாக்களுக்கு வேறாய்ப் பரமான்மா ஒருவன் உண்டென்பதும், உலகந் தோன்றி யழியும் என்பதும் பொய், உலகம் என்றும் இவ்வாறே நிலைபெறும் என்பதாம்.

இது மீமாஞ்சை நூலிற் கூறப்பட்ட கொள்கையாதலால் மீமாஞ்சை யெனப் பெற்றது.

மீமாஞ்சை நூலென்பது வேதத்தில் ஞானகாண்டத்தை இகழ்ந்து கருமகாண்ட வாராய்ச்சி செய்வதற் கெழுந்த நூல். இதுவும் வேதமெனப்படும். மீமாஞ்சைநூல் பூர்வ மீமாஞ்சை உத்தர மீமாஞ்சை என இருதிறப்படும்.

மீமாஞ்சகர் பொருட்குச் சத்திவேறென்பர்.

மீமாஞ்சை மதத்தில் பட்டாசாரியன் மதம், பிரபாகர மதம் எனும் இரண்டு உட்பிரிவுகளுண்டு.

## பட்டாசாரியன் மதம்.

பட்டன் மதமாவது:—கன்மமே பயன் கொடுக்கும். வேதத்துட் கூறப்பட்ட வேள்வி முதலாயினவே தத்துவ ஞானத்தைக் காட்டும். நையாயிகம் கூறுவதுபோல முத்தியில் ஆனந்தம் உண்டு என்பதாம். இது சுவர்க்க முத்தி எனப் பெறும்.

## பிரபாகர மதம்.

பிரபாகர மதமாவது:—கன்ம நாசத்தில் அபூருவம் என ஒன்று தோன்றி நின்று பயன் கொடுக்கும். அபூருவமாகிய ஞானமுங் கெட்ட போது, வைசேடிகர் கூறுவதுபோல, பாடாணம் போற் கிடப்பதே முத்தி என்பதாம். இது வினைகெடு முத்தி எனவும் பெயர் பெறும்.

பிரபாகரமதத்துக்குக் குருமதமெனவும் பெயருண்டு.

## ஏகான்மவாதம்.

ஏகான்மவாதமானது வேதத்தின் கன்ம காண்டத்தையிகழ்ந்து ஞானகாண்டத்தைப் பிரமாணமாகக் கொண்டது.

ஏகான்மவாதமானது மாயாவாதம், பாற்கரிய வாதம், கிரீடாப் பிரமவாதம், சத்தப்பிரம வாதம் என நான்குவகைப்படும்.

**மாயாவாதமாவது** :—சச்சிதானந்தமாய், நித்தியமாய், வியாபகமாய் நிற்பது பிரமம். பரமார்த்தத்திலே சத்தொன்றே மெய்ப் பொருள், ஏனைய வெல்லாம் பிரமத்தின் விவர்த் தனமாய் இப்பியில் வெள்ளிபோல அவிச்சை யினாற் காணப்படுவன வாகலிற் பொய். இங்ஙனம் தோன்றும் உலகத்திற்கு முதற்காரணமாகிய மாயை, பிரமம்போலச் சத்துமன்றி முயற்கோடு போல அசத்தும் அன்றி அநிருவசனமாயிருக் கும். அநிருவசனம்=சொல்லொணாதது. நிர்மல மாயிருக்கின்ற பிரமம் அந்த மாயா வுபாதிகளி னாலே வாதிக்கப்பட்டு இந்த வுடலிலே மயங்கி நிற்பதே ஜீவான்மா. ஆகாயத்திலே காற்றுத் தோன்றி மேகத்தை நீக்கியதைப்போல ஜீவான்மாவிடத்தில் வேதாந்த விசாரத்தால் தோன்றிய ஞானத்தால் இந்த மாயைக்கு வேறா கிய பிரம ரூபமே யான் என அறிவதே முத்தி என்பதாம். மாயாவாதிகள் பரமான்மாவிற்கும் சீவான்மாவிற்கும் உள்ள சம்பந்தம் பொன்னும் பணியும்போல் அபேதமென்றும், பிரமப்பொருள்

அவிச்சை வயத்தான் ஞாதா எனவும் ஞேயமென வும் பகுக்கப்பட்டு ஏற்ற சாதகங்களினின் றறியப் படினும் அவிச்சை நீங்கியவழி ஞேயமாமாறின் றிக்கேவல ஞானமாத்திரையேயாய் நிற்பதொன் றென்றும் கூறுவர். அசத்தை அசத்தெனக்கண்டு ஒருவியவழித் தோன்றுவது சூனியமேயன்றிப் பிறிதில்லை என்பதும் இவர்கள் கொள்கை.

## பாற்கரியவாதம்.

பாற்கரியவாதமாவது:—முற்கூறப்பட்ட பிரம மே சடமுஞ் சித்துமாகிய உலகங்களாய்ப் பரிண மித்தது. அங்ஙனம் பரிணமித்து விகாரப்பட்ட மையை அறியாமையினாற் பந்தமாயிற்று. பரமார் த்தத்தில் ஒருபொருளே கன்மத்தை யநுஷ்டிக் கும் முறையிற்றோன்றிய வேதாந்த ஞானத்தால் உடம்பிற்கு வேறாகிய ஆன்ம ரூபமாய் விளங்கும், அதுவே பரப்பிரமம் என்றறிந்து அதன்கண் இலயித்தலே முத்தி என்பதாம். இது உயிர் கெடும் முத்தி எனப்பெறும்.

## கிரீடாப் பிரமவாதம்.

கிரீடாப் பிரமவாதமாவது :—முற்கூறப்பட்ட பிரமமேநான். நான் ஒருபடித்தன்றிப் பலவேறு வகைப்பட்ட விகாரப் பொருள்களோடு கூடிப் பலவாற்றான் விளையாடுகின்றேன் என்று இவ்வா

றறிவதே முத்தி என்பதாம். குடமுடைந்தவழி குடா காயம் மகாகாயத்தோடு கூடுமாறுபோல, கிரீடாப் பிரமவாதிகள் உடம்பு நீங்கியவழி உயிர் பிரமத்தோடு கூடுவதன்றி இறந்த உயிர் மீளப்பிறப்பதில்லை என்பர்.

## சத்தப்பிரமவாதம்.

சத்தப்பிரமவாதமாவது :—காரணமாகிய பரப்பிரமம் இறுதிக்காலத்திற் சத்தவடிவிற்றாய் இருக்கும். அஃது அவிச்சையினாற் சடமுஞ் சித்துமாய உலகங்களாய் விரியும். முடிவின்கண் சத்த மாத்திரையே உள்ளது என அறிவதே முத்தி என்பதாம்.

## சாங்கியம்.

சாங்கியமாவது :—மூலப்பகுதி, நித்தமாய் வியாபகமாய்ச் சடமாய் எல்லாப்பொருட்குங் காரணமாய் முக்குணங்களும் ஒப்ப நின்ற அவதரமாய் அருவாய் உள்ளது. இஃது இருபத்து நாலாம் தத்துவம். இருபத்தைந்தாந் தத்துவம் புருடன். புருடன் பெத்தம் முத்தி இரண்டிலும் ஒரு தன்மையனே, தாமரை நீர் போல் ஒட்டற்று நிற்பன். மூலப்பகுதியின் பரிணமம் புத்தி. அதுவே மான் என்றும் அந்தக் கரணம் என்றும் பெயர் பெறும். அநாதியே

புத்தியைச் சார்ந்த அவிச்சை வயத்தாற் பெத்த னெனப்பட்டு இன்ப துன்ப வுணர்வு தோன்றா நின்றது. மூலப்பகுதியையும் புருடனையும் பகுத் துணர்வதால் அவிச்சை நீங்குவதே முத்தி. ஆன்மாக்களுக்கு வேருய் இறைவனொருவன் உண்டென்பதும் அவன் உணர்த்துவான் என் பதும் பொய் என்பதாம்.

எல்லாப்பொருளுஞ் சத்தாகலின் அளந்தறி பொருளுஞ் சத்தேயாமென்பதும், மலத்தால் மறைக்கப்பட்ட உயிர் கருவிகளுடன் கூடியவழி பலவேறு அவத்தைகளை அடையாது ஒரு தன் மைத்தாய் அறியும் என்பதும் இதன் கொள்கை யாகும். இதற்கு நிரீச்சுர சாங்கியம் எனவும் பெயருண்டு.

## யோகம்.

யோகமதமாவது :—நிலம் முதற் புருடன் ஈருகிய இருபத்தைந்து தத்துவங்களும் பெத்த முத்திகளும் நீதிக்கேதுவாம், இருபத்தாறாந் தத்துவமாக இறைவன் ஒருவன் உளன். அவன் முற்றுணர்வுடையவனுய்ச் சாத்திரங்களை அருளிச் செய்து புருடருக்கு ஞானத்தை அறி வுறுப்பன். அதனல் அணிமா முதலிய அட்ட

மாசித்திகளைப் பெற்றிருப்பதே முத்தி என்பு தாம்.

யோகநூலிற் கூறப்படும் தியான பாவனைகளிற் பதிப்பொருள் கோசரமாகும் என்பதும் இதன் கொள்கையாகும். இதற்குச் சேசுரசாங்கியம் என்றும் பெயருண்டு.

## பாஞ்சராத்திரம்.

பாஞ்சராத்திரமாவது :—இருபத்து நாலாந் தத்துவமாகிய குண தத்துவத்தின்மேல் இருபத்தைந்தாந் தத்துவமாக வாசுதேவனென்று ஒருவனுளன். அவனிடத்தினின்றுங் கண்ணன், அநிருத்தன், மகரத்துவசன், இரௌகிணேயன் எனும் நான்கு வியூகர்கள் தோன்றினார்கள். அவர்களால் சடமுஞ் சித்துமாகிய எல்லா உலகமும் படைக்கப் பட்டன. ஆகலான் உலகமெலாம் வாசுதேவன் பரிணமமேயாம். இங்ஙனங் கூறும் பாஞ்சராத்திரத்தினன்றி வேதங்களினுறுதிப்பயனுண்டாகாது. பாஞ்சராத்திர முறையே தீக்கை பெற்று வாசுதேவனை வழிபட்டு வாசுதேவனுருவில் இலயமாதலே முத்தி என்பதாம். ஆதலால் பாஞ்சராத்திரிகள் மாயை முதல்வனின் வேறு பொருளன்றென்றும், உலகைத் தோற்றுவிக்கும் போது முதல்வனுக்குத் துணைக்காரண முத

வியன வேண்டுவதில்லை யென்றும், முதல்வனுக்கும் உயிர்களுக்கும் உள்ள சம்பந்தம் சொல்லும் பொருளும் போற்பேதாபேதமென்றுங் கூறுவர்.

---

## அகப்புறச்சமயம்.

### பாசுபதம்.

பாசுபதமாவது :—ஆன்மாக்கள், பலவாய் நித்தமாய் வியாபகமாய்க் காரிய காரணக் கூட்டுர வாற்றோன்றும் ஞானத்தாற் றனித்தனி வேறு யுள்ளன. இவ்வான்மாக்களுக்கு ஆணவமலம் என்பதொன்றில்லை; மாயை, கன்மம் என்றிரண்டால் பந்தமுற்று இன்பத்துன்பங்களை அனுபவிக்கும். இவற்றின் உவர்ப்புத் தோன்றிச் சாத்திர முறையானே தீக்கைபெற்றவன்பால் ஈசனுடைய ஞானம் போய்ப்பற்றும். அப்போது குடும்பத்தின் பாரத்தைப் புத்திரர்பால் வைத்தொழித்துத் துறவறத்திற் செல்வார்போல, ஈசனுந் தன்னுடைய குணங்களை அவன்பாற் பற்றுவித்துத் தான் அதிகாரத்தினொழிவு பெற்று இருப்பன். இதுவே முத்தி என்பதாம். பாசுபதத்துக்குச் சங்கிராந்த வாதம் எனவும் பெயர் உண்டு.

## மாவிரதம்.

மாவிரதமாவது :—பாசுபதநூலிற் கூறிப் போந்த இயல்பையுடைய ஆன்மாக்கள் அவ்வாறே பந்தமுற்றுச் சுகதுக்கங்களை அனுபவிக்கும். மாவிரத சாத்திரத்திற்கூறும் முறையே தீக்கை பெற்று எலும்பு மாலையணிதல் முதலிய சரியை யின் வழுவாதொழுகினவர் முத்தராவர். முத்தருக்குச் சிவனோடுசமமான எல்லாக் குணங்களும் உற்பத்தியாம் என்பதாம். மாவிரதத்துக்கு உற்பத்திவாதம் எனவும் பெயர் உண்டு.

## காபாலம்.

காபாலமாவது :—ஆன்மாக்களியல்பும் பந்தவியல்பும் மாவிரதர் கொண்டவாறேயாம். சாத்திரமுறையே தீக்கைப்பெற்றுப் பச்சைக்கொடி ஒன்றைக் கைக்கொண்டு நாடோறும் மனிதர் தலையோட்டில் ஐயமேற்றுண்ண வேண்டும். இங்ஙனம் ஒழுகியவர்பாற் சிவனாவேசித்தலால் எல்லாக் குணங்களும் பெற்றுச் சிவசமமாவர் என்பதாம். காபாலம் ஆவேசவாதம் எனவும் பெயர் பெறும்.

## வாமம்.

வாமமாவது :—பாற்கரியன் கூறியவாறே சடமுஞ் சித்துமாகிய அனைத்துலகும் சத்தியின் பரி

ணமமே. வாம நூலில் விதித்த முறையே ஒழுகிச் சத்தியில் இலயித்தலே முத்தி என்பதாம்.

## வைரவம்.

வைரவமாவது :—பெரும்பாலும் வாம மதத்தோடொத்துச் சிறு பான்மை ஆசாரங்களான் வேறுபட்டு வயிரவனே பரம்பொருள் எனக் கொண்டு வைரவ பதத்திற் சேர்வதே முத்தி என்பதாம்.

## அயிக்கவாத சைவம்.

அயிக்கவாத சைவமாவது:—ஆணவமலமென்பதொன்றில்லை. மாயா கன்ம மலங்களே உள்ளன. உயிர் தானே யறியும் இயல்பையுடையது. சுத்தராயுள்ள ஆன்மாக்கள் செய்த புண்ணிய பாவங்களுக்கீடாக முதல்வன் உடம்பு முதலாயினவற்றைக் கூட்டுவிப்பன். அவற்றாலே ஆன்மாக்கள் புண்ணியபாவப் பலன்களாகிய இன்பதுன்பங்களைப் புசிக்குமிடத்து, இதாகிதங்களைப் புரிந்து மேலும் புண்ணிய பாவங்களை ஆர்ச்சித்து, அவற்றிற் கீடாகப் பிறந்திறந்துழலும். இங்ஙனம் உழன்று வரும்போது கன்மங்கள் துலையொத்த ஆன்மாவுக்கு முதல்வன் தனது கருணையால் அந்தக் கன்ம மாயாமலங்களைப் போக்குவன். மாயா கன்ம மலங்களை நீங்கி ஆன்மா பழைய

சுத்தத்தை யடையும். இதுவே முத்தி என்பதாம்.

இதுதான் துறைமங்கலம் சிவப்பிரகாச முனிவர்கொண்ட வீரசைவம்.

## அநேகேசுரவாதம்.

அநேகேசுரவாதமாவது :— தேர்முதலாயின பலர்கூடிச் செய்யக்காண்டலின், அதிவிசித்திரமான உலகிற்குப் பிரமன், திருமால், இந்திரன், வருணன், சிவன், வாயு, அக்கினி முதலிய பல கடவுளர் வேண்டப்படுவர் என்பதாம்.

---

## அகச்சமயம்.

### பாடாணவாத சைவம்.

பாடாணவாத சைவமாவது :—ஆன்மாவிற்கு ஆணவ மலம் குணம்போலச் சகசமாய் அநாதியே உள்ளது. அதனால் மாயை கன்மங்கள் ஆன்மாவைத் தலைக்கூடும். இறைவன் இருவினைக்கீடாகச் சரீரங்களைக் கொடுப்பன். ஆன்மா அவற்றைப் பொருந்தி இன்ப துன்பங்களை நுகரும். அப்பொழுது கண்ணொளியைக் காசபடலம் மறைத்தாற்போல ஆன்ம சைதன்னியத்தை ஆணவமலம் மறைக்கும். அதனாற் பிறவித் துன்பம் அதிகரிக்கும். பாசஞானமெல்லாம் தன்

கீழ் வியாப்பியமென்றறிந்து அவற்றின் நீங்கு தன் மாத்திரையே முத்தி. முத்திபெற்ற வழியும் ஆன்மாச் சகசமலம் நீங்குதலின்றிச் சுட்டறிவுஞ் சுகதுக்கானுபவமும் அற்றுப் பாடாணம் போற் கிடக்கும்; ஆன்மா முதல்வனோடு கூடுவதில்லை என்பதாம். இது பாடாண முத்தி.

## பேதவாத சைவம்.

பேதவாத சைவமாவது:—ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களுஞ் செம்பிற் களிம்புபோல் ஆன்மாக்களுக்கு அநாதியே உள்ளன. அவற்றால் ஆன்மாச் சுகதுக்கங்களை அநுபவிக்கும், கரணங்களிற் சென்ற தன்னறிவு பக்குவம் வந்துழித் தன்மாட்டு வந்தொன்றி நிராதாரமாய் நிற்கும். ஆன்மா இறைவன் திருவருளால் மும்மலங்களும் நீங்கிப் பெறுவானும், பேறுமாயிருக்கும். இது வேமுத்தி. அதன்மேலும் அடிமையாதலில்லை என்பதாம். இது மலம் போம் முத்தி.

## சிவசமவாத சைவம்.

சிவசமவாத சைவமாவது :—பதிஞானம், பசுஞானம், பாசஞானம்என்னும்மூன்றும் அநாதியே உள்ளன. பாசஞானமாகிய இந்திரியங்கள் விடயங்களை விளக்கப் பசுஞானம் அவற்றைப் புசிக்கும். இவ்விரு ஞானங்களும் நீங்கியவழி ஆன்

மாச் சுவாலையின்றிக் கிடக்குந்தழல்போல ஒன்றையுஞ் சுட்டியறியாது அறிவு மாத்திரையாயிருக்கும். அப்பொழுது, வேட்டுவன் புழுவை எடுத்துக் கொள்வது போலப் பதிஞானம் ஆன்மாவை எடுத்துக்கொள்ளும். புழு வேட்டுவனை நினைந்து அதன் வடிவாதன் மேலும் அதன் றொழிலையும் இயற்றி நிற்றல்போல, ஆன்மாவும் அப்பதியை நினைந்து அதன் வடிவாதன் மேலும் அதன் றொழிலையும் இயற்றி நிற்கும் என்பதாம். மாயாவுடல் தானே இங்ஙனம் நித்தியத்தைப் பெற்றிருப்பது முத்தி என்றதனால் இது விக்கிரக நித்த முத்தி எனப்பெறும். திருவண்ணமலை ஞானப் பிரகாச முனிவர் கொண்ட மதம் இதுவே.

உயிர் அறிவிக்க வேண்டாது தானே அறியும் இயல்புடையது என்பதும், பசுத்துவம் நீங்கிய வழி முற்றுணர்தல் முதலிய எண்குணங்களையும் பெறுதலின் பதிப் பொருள் அவ்வறிவான் அறியப்படும் கோசரப் பொருளே என்பதும், ஞானம் பிரகாசித்து முதற் பொருளைக் காண்டன் மாத்திரையே வீடுபேற்றிற்கு அமையும், மலம் நீங்கி முதல்வனுடன் அத்துவிதமாய்க் கூடி நிற்க வேண்டுவதில்லை என்பதும் சிவசமவாத சைவர் கொள்கையாகும்.

## சிவசங்கிராந்தவாத சைவம்.

சிவசங்கிராந்தவாத சைவமாவது :—ஆன்மாவின் சந்நிதியிற் காந்தபசாசம் போல உடல் இயங்குழி அதன்கணின்று கருவிகளே விடயங்களை அநுபவிக்கும். மலம் நீங்கும் வழிக் கண்ணடியின் முகவொளி தோற்றுமாறுபோல, முதல்வன் றிருவருள் ஆன்மாவின் மாட்டுச் சங்கிரமித்துத் தோன்றும். அவ்வழி உப்பளத்தி லிட்டவை யெல்லாம் உப்பாமாறுபோல ஆன்மாச் சிவமேயாய், அவ்வான்மாவின் சந்நிதியில் அறிவனவாகிய பசுகரணங்களுஞ் சிவகரணங்களாய் மாறுகிற சித்தியுற்றுச் சிவத்தை அறியும் என்பதாம். ஆகலான் இது சித்தி முத்தி எனப்பெறும். விடய ஞானத்தை விளக்குங் கருவிகளே தத்துவ ஞானத்தை விளக்குவதற்கு அமையும், முதல்வன் குருவாதல் வேண்டாம் என்பதும், அறிவை விளக்குங் கருவிகளால் மயக்கம் நிகழ்வதில்லை என்பதும் சிவசங்கிராந்த வாதசைவர் கொள்கை.

## ஈசுரவவிகாரவாத சைவம்.

ஈசுரவவிகாரவாத சைவமாவது:—பலதுளைகளையுடைய குடத்திலேற்றிய தீபத்தைப்போல நவத்துவாரங்களையுடைய உடம்பில் ஆன்மாவானது அறிவாய் நிற்கும். அவ்வாறு நிற்பினும் பொறிகளோடு அவ்வவற்றின் அளவாய்க் கூடி விடயங்களை

அறியும். அது மலபரிபாகமுஞ் சத்திநிபாத முஞ்சேர்ந்தபோது முதல்வன் றிருவருளால் ஞானத்தைப் பெற்று முதல்வன் றிருவடி நீழலைத் தலைக்கூடும். அதன் பின்னர் முதல்வனது உபகாரத்தை விரும்பாது என்பதாம்.

உயிர் அறிவிக்கவேண்டாது தானே அறியும் இயல்பிற்று என்றும், முதல்வன் உயிர்கட்குக் காட்டியுபகரிப்பதே யன்றித் தானும் விரவி நின்று காண்பதில்லை யென்றும் ஈசுரவவிகார வாதிகள் கூறுவர்.

## சிவாத்துவித சைவம்.

சிவாத்துவித சைவமாவது :—பதி பசு பாசங் களினியல்பும், தத்துவங்களின் தோற்ற வொடுக் கங்களும், அஞ்சவத்தைப்படும் வேறுபாடுகளும், அனைத்துஞ் சித்தாந்த சைவரோடொப்பவாகும், பசுபாசங்கள் பதிவியாபகத்தில் வியாப்பியமாய் நிற்றலால் அவை தனிமுதல்களன்று. அவற்றிற் கும் பதிக்குமுள்ள பேதம் குணகுணி பேதத் தைப்போல உட்பேதமே யன்றி புறப்பேத மில்லை ; கவடு கோடுகளெல்லாம் மரமாமாறு போல அனைத்தும் சத்தே. பசுவுக்கு அறியுந் தன்மையில்லை. ஆன்மாவினிடமாக நின்றறிவது சத்தாகிய சிவமே என்பதாம். ஆதலால் சிவாத்து

விதவாத சைவர் மாயை முதல்வனின் வேறு பொருளன்றென்றும், இருவினையின்வரும்புனருற் பவம் உயிரின் பொருட்டுச் சிவத்துக்கேயாம் என்றும், சிவசத்தின்றன்மையே உயிர்க்குத் தன்மையாவதன்றி வேறில்லையாகலிற் சத்தே அசத்தை அறியும் என்றும், முதல்வனைத் தலைப் பட்ட உயிர் அம்முதல்வனோடு ஒன்றாய்ப் போவதேயாகலின் ஆண்டு அறிவதூஉம் அறியப் படுவதூஉமாதல் இல்லை யென்றும், முதல்வ னுந் தன்னானந்தத்தை அநுபவிப்பன் என்றுங் கூறுவர். இதுவே கண்ணுடைய வள்ளலும் நீல கண்ட வாசிரியரும் கொண்ட கொள்கை.

நிமித்தகாரணமாகிய முதல்வன் மாயை யோடுங்கூடி முதற்காரணமுமாய்ப் பரிணமிப்பன் என்பதே சிவாத்துவிதர் கொள்கையாகலான், சிவாத்துவிதத்துக்கு நிமித்தகாரணபரிணாம வாதமெனும் பெயர் உண்டு.

ஈண்டுக்கூறப்பெறாத சமயங்களாகிய துவித வாதம், சௌரமதம், சௌமியமதம், பாணினி மதம், இரணிய கருப்பமதம், ஸ்மார்த்தமதம், பௌராணிகமதம், கௌளமதம், யாமளமதம் முதலியவையெல்லாம் கூறியவற்றின் பகுதியாய் இவற்றுள்ளே அடங்கும்.

இங்ஙனம் கூறப்பட்ட புறப்புறம், புறம், அகப்புறம், அகமெனும் நான்குவகைச் சமயங்களுக்கு வேறாயது சுத்த சைவமாகும்.

## சுத்த சைவம்.

சுத்த சைவமாவது :—சித்தாந்த சைவத்தையொப்ப பதிபசுபாசங்களின் இயல்புகளை உடம்பட்டு முத்தியில் உயிரானது சிவபரம்பொருளினிடத்தயிக்கமுற்று ஒரு பயனும் ஓரானந்தமுமின்றி நிற்கும் என்பதாம். சுத்த சைவத்துக்குச் சைவம் என்றும் சாமானிய சைவம் என்றும் பெயர்களுண்டு.

இதற்கதீதமானது சித்தாந்த சைவம்.

## சித்தாந்த சைவம்.

சித்தாந்தசைவமாவது :— சற்காரியவாதங்கொண்டு காட்சி அநுமானம் ஆகமம் எனும் மூவித பிரமாணங்களால் கடவுள் ஒருவர் அநாதியே உண்டு. அவர் சித்தாந்தத் தெய்வமாகிய சிவபரம்பொருளே. அக்கடவுளுக்கு வேறாய் எண்ணில்லாத உயிர்கள் அநாதியே உண்டு. அவைகளை அநாதியே பந்தித்த ஆணவமலம் ஒன்றுண்டு. அம்மலத்தின் காரணமாக உயிர்களுக்குக் கன்மமலம் அநாதியே உண்டு. மல சம்பந்திகளான உயிர்களுக்கு உறைவிடமாக

அநாதியே மாயாமலமொன்றுண்டு. மலத்தைச் செலுத்துகின்ற ஆதி சத்தியாகிய திரோதான மலமும் அதனாலான மாயாகாரியங்களாகிய மாயேய மலமும் உண்டு. கன்ம மலமானது ஆகாமியம், சஞ்சிதம் பிராரத்தம் என முத்திறப்படும். கன்ம பல போகங்களை அநுபவிக்குந் தானங்களாகிய சுவர்க்க நரக வுலகங்களுண்டு. அங்ஙனம் அநுபவிக்குங் கால் அடையத்தக்க சுரர் அலகை நரகர் முதலிய யோனி பேதங்களுண்டு. இங்ஙனம் இறந்து பிறந்து வருவதால் மறுபிறப்புக்களுண்டு, சங்காரம் இளைப்பொழித்தலாகும். பிறவிப் பெருங்கடலைக் கடக்கத்தக்க உபாயங்களை அறி விக்கும் விதி நூல்களாகிய வேத சிவாகமங்க ளுண்டு. அவைகளில் விதிக்கப்பட்ட வருணாச் சிரம பேதங்களுக்கிடாக ஒழுகுங்கால் செய்யப் படுங் கன்மங்கள் நல்வினை தீவினைகளென இருதிறப்படும். இவைகளும் திருஷ்ட சன்ம போக்கியம், திருஷ்டா திருஷ்ட சன்மபோக்கி யம், அதிருஷ்ட சன்ம போக்கியம் என மூவகைப் படும். அக்கன்ம பேதங்களால் போக பேதங்க ளுண்டு. கன்ம பலன்கள் அநுபவமாவது நிச்சயம். அப்பலன்களை இறைவனே உயிர் களுக்குக் கொடுப்பன். அங்ஙனமாயினும்

சிவாகமங்களின் வழி ஒரு வினைக்கு மற்ரோர் வினையால் அழிவுண்டு. தருமங்களைச்செய்ய வேண்டும். அதுவும் பாத்திராபாத்திர மறிந்து செய்ய வேண்டும். தருமங்களுள்ளே வேள்வி சிறந்தது. அதனினும் சீவகாருண்யம் மிகச் சிறந்தது. அதுவும் அருளில்லாதவழி கூடா தாகையால் உயிர்கள் மாட்டு அருள்வேண்டும். அவ்வருள் இல்லாதவர் எத்தகையராஞலும் அவர்க்கு மோட்சவுலகாநுபவமில்லை. அங்ஙனஞ் செய்கின்ற வினைகளும் ஒருவன் செய்தது அவனைச் சார்ந்தார்க்குமாகும். முத்தியுலக மானது தேவருலகங்களுக்கு மேலுள்ளது. அதனை அடைவதற்கு நித்தியா நித்திய வஸ்து விவேகம் முதற்சாதனம். வேறு சிறந்த சாதனங் களுமுண்டு. அவைகளைக் கடைப்பிடித்து முதல் வனை மனோவாக்குக் காயங்களால் வழிபடின் இருவினை யொப்புண்டாகி மல பரிபாகத்தால் சத்திநிபாதந் திகழும். தீவிர முதலிய சத்தி நிபாதமுடையோர்க்கு முதல்வன் குருவுமாய் வந்து தீக்கை செய்து மலங்களைப்போக்கிச் சிவா னந்தத்தை அளிப்பன். அக்குருவின் உபதேசப் படி நின்று சிவானந்தத்தை அநுபவிக்கின்ற சீவன்முத்தர்கள் வாசனமல நீக்கத்துக்காக ஸ்ரீ பஞ்சாட்சர ஜெபமும் குருலிங்க சங்கம

வழிபாடும் செய்ய வேண்டியது அவசியம். இவ்வாறு சீவன் முத்தராய்த்திகழ்ந்து பிராரத்த கன்மாநுபவ முடிவில் விதேக முத்தி யெய்தி சிவத்துடன் இரண்டறக் கலந்து சிவாநுபவ மொன்றையே அநுபவித்துக் கொண்டிருப்பர். முத்தியிலும் முப்பொருள்களும் உயிர்களுக்கு முதல்வன் உபகாரமும் உண்டு. முதல்வனின் அருள்சேர் முத்தியாகிய அடிசேர் முத்தியே **சித்தாந்த முத்தி** என்பதாம்.

சித்தாந்த சைவம், சைவம் எனவும் வைதிக சைவம் எனவும் பெயர் பெறும்.

---

## சமயங்களும் அவற்றின் உட்பிரிவுகளும்.

1. புறப்புறச்சமயங்கள்.
    - 1. உலோகாயதம்.
        - 1. தூலதேகான்ம வாதம்.
        - 2. சூக்குமதேகான்ம வாதம்.
        - 3. இந்திரியான்ம வாதம்.
        - 4. அந்தக்கரணான்ம வாதம்.
        - 5. பிராணான்ம வாதம்.
        - 6. சமுதாய வாதம்.
    - 2. நால்வகைப் பௌத்தம்.
    - 2a மாத்தியமிகம்.
    - 3. யோகாசாரம்.
    - 4. சௌத்திராந்திகம்.
    - 5 வைபாடிகம்.
    - 6. ஆருகதம்.— நிகண்டவாதம்.

2. **புறச்சமயங்கள்.**
   1. தருக்கம். …
      1. வைசேடிகம்.
      2. நையாயிகம்.
   2. மீமாஞ்சை. …
      1. பட்டம்.
      2. பிரபாகரம்.
   3. ஏகான்மவாதம். …
      1. மாயா வாதம்.
      2. பாற்கரிய வாதம்.
      3. கிரீடாப்பிரம வாதம்.
      4. சத்தப்பிரம வாதம்.
   4. சாங்கியம்.
   5. யோகம்.
   6. பாஞ்சராத்திரம்.

3. **அகப்புறச்சமயங்கள்.**
   1. பாசுபதம்.
   2. மாவிரதம்.
   3. காபாலம்.
   4. வாமம்.
   5. வைரவம்.
   6. ஐக்கியவாத சைவம்.

   அகப்புறச்சமயங்களில் அநேகேசுர வாதமும் சேரும்.

**4. அகச்சமயங்கள்.**

1. பாடாணவாத சைவம்.
2. பேதவாத சைவம்.
3. சிவசமவாத சைவம்.
4. சிவசங்கிராந்தவாத சைவம்.
5. ஈசுரவவிகாரவாத சைவம்.
6. சிவாத்துவிதவாத சைவம்.

இவைகளுக்கு அதீதமானது ... சுத்தசைவம் அல்லது சாமானிய சைவம்.

அதற்கதீதமானது ... சித்தாந்த சைவம்.

---

## சமயங்களின் வேறு பெயர்கள்.

| | |
|---|---|
| உலோகாயதமும் அதன் உட்பிரிவுகளும் | காட்சி வாதம். |
| பௌத்தமும் அதன் உட்பிரிவுகளும் வைசேடிகமும் நையாயிகமும் | கணபங்க வாதம். |

| | | |
|---|---|---|
| மாத்தியமிகமும்<br>சூன்யான்ம வாதமும் | | சூன்ய வாதம். |
| மாத்தியமிகம் | ... | பேத வாதம். |
| யோகாசாரம் | ... | விஞ்ஞான வாதம். |
| சௌத்திராந்திகமும்<br>வைபாடிகமும் | | சமுதாய வாதம். |
| ஆருகதம் | ... | அநேகாந்த வாதம், சைனம், சமணம், அமணம். |
| சௌத்திராந்திகமும்<br>வைபாடிகமும்<br>ஆருகதமும்<br>வைசேடிகமும்<br>நையாயிகமும் | | பரமாணுகாரண வாதம். |
| பிரபாகரம் | ... | குருமதம். |
| மாயாவாதம் | ... | விவர்த்தன வாதம், விஞ்ஞானான்ம வாதம், அபேத வாதம். |
| சாங்கியம் | ... | நிரீச்சுரசாங்கியம். |
| யோகம் | ... | சேசுர சாங்கியம், பாதஞ்சலம். |

| | | |
|---|---|---|
| பாஞ்சராத்திரம் | ... | பேதாபேத வாதம். |
| பாஞ்சராத்திரமும் வாமமும் | } | பரிணாம வாதம். |
| பாசுபதம் | ... | சங்கிராந்த வாதம். |
| மாவிரதம் | ... | உற்பத்தி வாதம். |
| காபாலம் | ... | ஆவேச வாதம். |
| ஈசுரவவிகாரவாத சைவம் | ... | அவிகார வாதம். |
| சிவாத்துவிதவாத சைவம் | ... | நிமித்த காரணபரிணாம வாதம். |
| சுத்த சைவம் | ... | கேவல சைவம், சாமானிய சைவம். |
| சுத்த சைவமும் சித்தாந்த சைவமும் | } | சற்காரிய வாதம். |
| சித்தாந்த சைவம் | ... | சைவம், வைதிக சைவம். |

---

## சமயங்களின் முத்தி பேதங்கள்.

| | | |
|---|---|---|
| உலோகாயதம் | ... | அரிவையரின்புறு முத்தி. |
| சௌத்திராந்திகம் | ... | கந்தமைந்துமறு முத்தி. |
| ஆருகதம் | ... | அட்டகுண முத்தி. |
| நிகண்டாவாதம் | ... | முக்குணங்கள் கெடுமுத்தி. |

| | |
|---|---|
| வைசேடிகம்<br>பிரபாகரம்<br>பாடாணவாத சைவம் | பாடாண முத்தி. |
| பட்டம் (பூர்வமீமாஞ்சை). | ... சுவர்க்க முத்தி. |
| பிரபாகரம் | ... வினைகெடு முத்தி. |
| மாயாவாதம் | ... விவேக முத்தி. |
| பாற்கரியவாதம் | ... உயிர்கெடு முத்தி. |
| சாங்கியம் | ... அவிச்சைபோ முத்தி. |
| யோகம் | ... அட்டமாசித்தி முத்தி. |
| பேதவாத சைவம் | ... (ஆணவ) மலம்போ முத்தி. |
| சிவசமவாத சைவம் | ... விக்கிரக நித்த முத்தி. |
| சிவசங்கிராந்தவாத சைவம் | ... சித்தி முத்தி. |
| சித்தாந்த சைவம் | ... அருள்சேர் முத்தி அல்லது அடிசேர் முத்தி. |

# சிவஞானபோத நூல் விளக்கம்.

## முதற் பிரிவு.

1. சிவஞான போதம் என்பது என்ன?

சிவஞானபோதம் என்பது சிவத்தை யறிதற்குக் கருவியாயுள்ள ஓர் ஞான நூல்.

2. சிவஞான போதம் எத்தனை அதிகாரங்களை யுடையது?

சிவஞான போதமானது பொது, உண்மை என இரண்டு அதிகாரங்களை யுடையது.

3. சிவஞான போதம் எத்தனை யியல்களை யுடையது?

சிவஞான போதமானது பிரமாணவியல், இலக்கணவியல், சாதன வியல், பயனியல் என நான்கு இயல்களை யுடையது.

4. சிவஞான போதம் எத்தனை சூத்திரங்களை யுடையது?

சிவஞான போதமானது இயல் ஒன்றுக்கு மூன்று சூத்திரங்களாக நான்கு இயல்களுக்கும் பன்னிரண்டு சூத்திரங்களை யுடையது.

5. சிவஞான போதம் எத்தனை அதிகரணங்களை யுடையது?

சிவஞான போதமானது முப்பத்தொன்பது அதிகரணங்களையுடையது.

6. பன்னிரண்டு சூத்திரங்களுக்கும் தனித் தனி அதிகரணங்கள் எத்தனை?

முதற் சூத்திரத்துக்கு அதிகரணங்கள் மூன்றும், இரண்டாஞ் சூத்திரத்துக்கு நான்கும், மூன்றாஞ் சூத்திரத்துக்கு ஏழும், நான்காஞ் சூத்திரத்துக்கு மூன்றும், ஐந்தாஞ் சூத்திரத்துக்கு இரண்டும், ஆறாஞ் சூத்திரத்துக்கு இரண்டும், ஏழாஞ் சூத்திரத்துக்கு மூன்றும், எட்டாஞ் சூத்திரத்துக்கு நான்கும், ஒன்பதாஞ் சூத்திரத்துக்கு மூன்றும், பத்தாஞ் சூத்திரத்துக்கு இரண்டும், பதினொராஞ் சூத்திரத்துக்கு இரண்டும், பன்னிரண்டாஞ் சூத்திரத்துக்கு நான்கும் ஆக முப்பத்தொன்பது அதிகரணங்கள் உண்டு.

## இயல்களின் கருத்து.

இரண்டதி காரநான்கா
மியலிய லுக்குமூன்றாய்த்
திரண்டசூத் திரங்கள்பன்னி
ரண்டதி கரணமுப்பா
னிரண்டுட னேழாமேலாங்கிவ்
வெழிற்சிவ ஞான போத

முரண்டவிர் வேதசார
சித்தாந்த முதனூலாமே.

மூன்றுநான் கேழுமூன்றே
முடிந்தபின் னிரண்டிரண்டே
மூன்றுநான் மூன்றுநன்றாய்
முடிந்தபின் னிரண்டிரண்டே
என்றநான் கீறுதாமே
யிவையீரா றிலக்கத்துள்ளே
என்றமுப் பாஞென்பானை
யெனக்கா னிரங்கினனே.

---

## இரண்டாம் பிரிவு.

7. பொது அதிகாரத்திற் கூறப்படுவது என்ன?
பொது அதிகாரத்தில் கடவுளது தடத்த இலக்கணம் கூறப்படுகின்றது.

8. உண்மை யதிகாரத்திற் கூறப்படுவது என்ன?
உண்மை யதிகாரத்தில் கடவுளது சொரூப இலக்கணங் கூறப்படுகின்றது.

9. இரண்டதிகாரங்களிலும் அடங்குஞ் சூத்திரங்கள் யாவை?
பொது அதிகாரத்தில் முன்னாறு சூத்திரங்களும், உண்மை யதிகாரத்தில் பின்னாறு சூத்திரங்களும் அடங்கும்.

10. பிரமாண வியலின் மூன்று சூத்திரங்களி லும் கூறப்படுவன யாவை?

பிரமாண வியலின் முதற் சூத்திரத்தில் பதி யுண்மைக்குப் பிரமாணமும், இரண் டாஞ் சூத்திரத்தில் பாச வுண்மைக்குப் பிரமாணமும், மூன்றாஞ் சூத்திரத்தில் பசு வுண்மைக்குப் பிரமாணமும் கூறப்படு கின்றன.

11. இலக்கண வியலின் மூன்று சூத்திரங்களி லும் கூறப்படுவன யாவை?

இலக்கண வியலின் முதற் சூத்திரத்தில் பசு விலக்கணமும், இரண்டாஞ் சூத்திரத் தில் பாச விலக்கணமும், மூன்றாஞ் சூத்தி ரத்தில் பதி யிலக்கணமும் கூறப்படு கின்றன.

12. சாதன வியலின் முதற் சூத்திரம் கூறுவது என்ன?

சாதன வியலின் முதற் சூத்திரம் பதி, பசு, பாசம் எனும் மூன்றனுள், சாதித்துப் பெறுதற் குரிய அதிகாரமுடையது இது வெனக் கூறுகின்றது.

13. சாதன வியலின் இரண்டாஞ் சூத்திரம் கூறுவது என்ன?

சாதன வியலின் இரண்டாஞ் சூத்திரம் பசுவானது பதியை அடைவதற்குக்கொள்ள வேண்டிய சிறந்த கருவியெனப்படும் சாதனம் இதுவெனக் கூறுகின்றது.

14. சாதன வியலின் மூன்றாஞ் சூத்திரம் கூறுவது என்ன?

சாதன வியலின் மூன்றாஞ் சூத்திரம் அத்தகைய சிறந்த கருவியாகிய சாதனத்தைச் செய்யுமாறு இதுவெனக் கூறுகின்றது.

15. பயனியலின் முதற் சூத்திரம் கூறுவது என்ன?

பயனியலின் முதற் சூத்திரம் பசுவானது தன்னைப் பந்தித்த பாசம் நீங்கப் பெறுவதாகிய பெத்த நீக்கப் பயனைக் கூறுகின்றது.

16. பயனியலின் இரண்டாஞ் சூத்திரம் கூறுவது என்ன?

பயனியலின் இரண்டாஞ் சூத்திரம் பெத்த நீக்க முற்ற பசுவானது தனக்கு வேண்டிய இன்பப் பேற்றை அடையப்பெறும் முத்திப் பயனைக் கூறுகின்றது.

17. பயனியலின் மூன்றாஞ் சூத்திரம் கூறுவது என்ன?

பயனியலின் மூன்றுஞ் சூத்திரம் பெத்த நீக்கமும், முத்தியும் பெற்ற பசுவிற்கு அதனது சீவன்முத்தி நிலைக்கண் ணிகழும் இயல்பு இது வெனக் கூறுகின்றது.

பேசியவவ் வதிகாரம்
பொதுவுண்மைப் பெயராம்
பிரமாண மிலக்கணஞ்சா
தனம்பயனுன் கியலே
ஆசில் பதி பாச பசு
வுண்மைகளுக் களவை
யறைந்தபசு பாசபதி
யிலக்கணங்க ளாறும்.

ஏசினே யத்தழுந்த
வேற்றது நற் பசுவே
யேற்றசா தனமதனை
யியற்றுமுறை யிஃதே
ஆசில்பயன் முத்திபய
னவையடைந்தோர் தமக்கு
அகலுலகி னிகழுமியல்
பிவையறையு மாறே.

---

## மூன்றும் பிரிவு.

18. முதற் சூத்திரத்தின் கருத்து என்ன?
சங்கார காரணனாகிய அரனே உலகிற்குக் கடவுள் என்பது.

19. இரண்டாஞ் சூத்திரத்தின் கருத்து என்ன?

உயிர்களிடத்தில் கடவுள் அத்துவிதமாய்க் கலந்து நிற்கின்றாரென்பது.

20. அத்துவிதம் என்ற சொல்லிற்குப் பொருள் என்ன?

அத்துவிதம் என்பது ஒன்றாகாது இரண்டு மாகாது இரண்டற்றது என்பதாம்.

21. மூன்றாஞ் சூத்திரத்தின் கருத்து என்ன?

எண்ணில்லாத உயிர்கள் அநாதியாயுண் டென்பது.

22. நான்காஞ் சூத்திரத்தின் கருத்து என்ன?

உயிர்கள் கேவலாவத்தை, சகலாவத்தை, சுத்தாவத்தை என மூன்றவத்தைகளை யடையு மென்பது. அவத்தை யென்பது நிலை.

23. ஐந்தாஞ் சூத்திரத்தின் கருத்து என்ன?

உயிர்களுக்குச் செயலின்மையால் அவைகள் கடவுளாற் செய்யப்படும் உபகாரத்தை உடையன என்பது.

24. ஆறாஞ் சூத்திரத்தின் கருத்து என்ன?

அழியுந் தன்மையதான உலகிற்கு வேறாய் என்றும் அழியா நிலைமையை யுடையது பதி என்பது.

25. ஏழாஞ் சூத்திரத்தின் கருத்து என்ன?
சார்ந்ததன் வண்ணமா யுள்ளது ஆன்மா என்பது.

26. எட்டாஞ் சூத்திரத்தின் கருத்து என்ன?
உயிர்கள் தங்கள் அஞ்ஞானத்தினை நீக்கி ஞானத்தினை யுணரும் முறைமை இன்ன தென்பது.

27. ஒன்பதாஞ் சூத்திரத்தின் கருத்து என்ன?
ஆன்மாவைத் தெளிவிக்கும் முறைமையால் ஆன்மசுத்திசெய்யும் வழி இன்னதென்பது.

28. பத்தாஞ் சூத்திரத்தின் கருத்து என்ன?
பாசத்தை யறுக்கும் வழி இன்னதென்பது.

29. பதினொராஞ் சூத்திரத்தின் கருத்து என்ன?
பாச நீக்கமுற்ற உயிர் சிவத்தில் அழுந்தும் என்பது.

30. பன்னிரண்டாஞ் சூத்திரத்தின் கருத்து என்ன?
எக்காலத்தும் உபகாரியான கடவுளுக்குப் பாச நீக்கமும் சிவப் பேறும் பெற்ற உயிர்கள் பணிசெய்து வழிபடும் முறைமை இன்னதென்பது.

## சூத்திரக் கருத்து.

முதற்பதி யரனே யைந்து
முன்னத்து விதமிரண்டே
யிதற்பினே யனுமா னத்தா
லெண்ணிலா வுயிர்கண் மூன்றே
யதற்பினே யவத்தை நான்கே
யகமறுத் திடலே யைந்தே
செகற்பதி பிரித்தலாறே
தெரிவித்த லுயிரை யேழே

மறைப்பினை நீக்கி ஞான
வாரியை நினைத்த லெட்டே
சிறப்புடை யுபாயந் தம்மாற்
றெளிவித்த லுயிரை யொன்பா
னறுத்திடன் மலங்கள் பத்தே
யழுந்தலே சிவத்தி லொன்றே
திறப்பணி கொளலிரண்டே
சிவஞான போதஞ் சித்தி.

## சிவஞான போத சூத்திரங்களின் அதிகரண வடைவும் சூத்திரப்பொருளும்.

---

### முதற் சூத்திரம்.

அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்.

**முதலதிகரணம்** :—*அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின்,*

**இரண்டாமதிகரணம்** :—*தோற்றிய திதியே ஒடுங்கி* (*மலத்*) *துளதாம்,*

**மூன்றாமதிகரணம்** :—*அந்தம் ஆதி.*

*இ-ள். அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் இவ்வாறு ஆண் பெண் அலியாகப் பகுத்துப் பலவாய்ச் சுட்டி யறியப்படும் பிரபஞ்சத் தொகுதியானது, தோன்றுதற்குரிய சற்காரிய முறையால் தோன்றி நிற்றலேயன்றி அழிதலு முடைமையால், ஒருவனாற் றோற்றப்பட்டதான உள்பொருளேயாம். அது, தனது காரணத்துளொடுங்கி (ஆன்மாக்களிடத்துள்ள சகசமலமாகிய ஆணவமலம் நீங்காமையால் அது நீங்குதற் பொருட்டு) மீளத் தனது காரணத்தினின்றுந் தோன்றுங்கால், தான் ஒடுங்குதற்கு*

நிமித்த காரணனாய் நின்ற கடவுளாலே மீளத் தோன்றுவதாம். ஆதலால் காரியங்களைத் தமது காரணத்துள் ஒடுக்குதலாகிய அழித்தற் றொழிலைச் செய்யுங் கடவுளே உலகிற்கு முதற் கடவுள். அம் முதற் கடவுளின் ஆணையைத் தாங்கிப் படைத்தற் றொழிலையும் காத்தற் றொழிலையும் செய்யும் சிருட்டிகர்த்தர் திதிகர்த்தர் ஆகிய இருவரும் முதற்கடவுளாகார் என அளவை நூலுணர்ந்தோர் கூறுவர். எ - று.

ஒரு காரியத்துக்கு மூன்று காரணங்கள் உள. குடமாகிய காரியத்துக்கு மண் முதற் காரணம். தண்ட சக்கரங்கள் துணைக்காரணம், குலாலன் நிமித்த காரணன்.

---

## இரண்டாஞ் சூத்திரம்.

அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே.

**முதலதிகரணம்** :—அவையே தானே ஆய்,

**இரண்டாமதிகரணம்** :—ஆணையின் இருவினையின்,

**மூன்றமதிகரணம்** :— போக்கு வரவு புரிய,

**நான்காமதிகரணம்**:— ஆணையின் நீக்கம் இன்றி நிற்கும்.

இ-ள். அங்ஙனம் பெறப்பட்டச் சங்கார காரணனாகிய முதல்வன், உயிர்களிடத்திற் கலந்து, கலப்பினாலும் பொருட்டன்மையாலும் உயிர்க்குயிராதற் றன்மையாலும் அவ்வுயிர்களே யாய், அவற்றின் வேறுமாய், உடனுமாய் நின்று, ஆணை யென்னும் பரியாயப் பெயருடைய தனது சிற்சத்தியாலே, ஆன்மாக்களால் முன்னர் ஈட் டப்பட்டு மாயையிற் கட்டுப்பட்டுக் கிடக்கும் புண்ணிய பாவங்களாகிய இருவினைகளுக் கேற்ப, அவை பிறந்திறக்கும்படிச் செய்யும் வண்ணம், அவ்வாணையாகிய சிற்சத்தியோடு நீக்கமின்றி நிற்பன். எ-று.

முதல்வன் கலப்பினால் உயிர்களேயாய் நிற்கு மாறுவது உடலில் உயிர் நிற்குமாறு போல்வது.

முதல்வன் பொருட்டன்மையால் உயிர்களின் வேறாய் நிற்குமாறுவது கண்ணின் அருக்கன் போல் வேறாய் நிற்பது.

முதல்வன் உயிர்க்கு உயிராதற் றன்மையால் உயிர்களோடு உடனாய் நிற்குமாறுவது, ஒரு விட யத்தைக் காணுங்கால், ஆன்ம போதமானது கண் ணொளியெனத் தானென வேறின்றி உடனாய் நின்று காணுமாறு போல்வது.

---

## மூன்றாஞ் சூத்திரம்.

உளதில தென்றலி னெனதுட லென்றலி
னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி
லுண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா.

முதலதிகரணம் :—*இலது என்றலின் ஆன்மா உளது,*

இரண்டாமதிகரணம் :—*எனது உடல் என்றலின் ஆன்மா உளது,*

மூன்றாமதிகரணம் :—*ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது,*

நான்காமதிகரணம் :—*ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது,*

ஐந்தாமதிகரணம் :—*கண்படில் உண்டிவினை இன்மையின் ஆன்மா உளது,*

ஆறாமதிகரணம் :—*உணர்த்த உணர்தலின் ஆன்மா உளது,*

ஏழாமதிகரணம் :—*மாயா இயந்திர தநுவினுள் ஆன்மா உளது.*

*இ-ள். உயிர் சூனியமெனின் அவ்வாறு சொல்வதொன்று உளதாய் நிற்றலானும், உடம்பே உயிரெனின் எனதுடலென்று பொருட் பிறிதின் கிழமைப்படக் கூறுதலானும், உடம்*

பகத்தே பொருந்தி நின்று யானென தென்னுஞ் செருக்குறுதலானும், ஐம்பொறிகளே உயிரெனின் அவை தம்முள் ஒன்றை யொன்றறியாததானும் ஒன்றறிந்ததை ஒன்றறியாததானும் ஒருங்கே ஐந்தும் தத்தம் விடயங்களை யறியாததானும், சூக்கும உடம்பே உயிரெனின் கனவொடு பயின்றதனை நனவின்கணுற்றறிந்து நிற்றலானும், பிராணவாயுவே உயிரெனின் இன்பதுன்பப்பயன்களை கருவிகளொடுங்கிய விடத்தினன்றி ஒடுங்காது விழித்தவிடத்தே நுகர்ந்து நிற்றலானும், பிரமமேயுயிரெனின் அறிந்தாங் கறிதலின்றி மறந்து மறந்து (ஐந்தவத்தைப்பட்டு) அறிதலானும், அனைத்துங் கூடிய தொகுப்பே உயிரெனின் அனைத்தும் நீங்கிய கேவல துரியாதீதத்தும் உயிர் உண்மையானும், இவையனைத்திற்கும் வேறாய் இந்த உடலின்கண் உயிரெனப்படுவது ஒன்றுண்டு. எ - று.

---

## நான்காஞ் சூத்திரம்.

**அந்தக் கரண மவற்றினொன் றன்றவை**
**சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா**
**தமைச்சரா சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.**

**முதலதிகரணம் :—** *அந்தக்கரணம் அவற்றின் ஒன்று அன்று,*

**இரண்டாமதிகரணம் :—**(ஒன்றன்றுயினும்) *சகசமலத்து உணராது அவை சந்தித்தது,*

**மூன்றாமதிகரணம் :—***அமைச்சு அரசு ஏய்ப்ப நின்று அஞ்சு அவத்தைத்தே.*

இ-ள். உயிரானது ஐம்பொறிகளைப்போல ஒன்றனை யொன்றுணராத மனம் புத்தி அகங் காரஞ் சித்தங்களாகிய அந்தக் கரணங்களின் வேறாய் உள்ளது. ஆயினும் அவ்வுயிர் சகசமல மாகிய ஆணவமலத்தான் மறைப்புண்டு தனக் கென அறிவின்றி, தனக்கு நண்ணுர் வின்மை யின் சூழ்ச்சித் துணைவராகிய அமைச்சரோடு கூடிநின்று தன் றொழில்களை நடாத்தும் அரச னைப்போல, அந்தக்கரணங்களாகிய தனதுசூழ்ச் சித்துணைகளோடு கூடிநின்று* சாக்கிரம் சொப் பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதங்களாகிய ஐந்தவத்தைகளையுடைத்தாய் நிற்கும்.

---

*இவை ஐந்தும் காரிய கேவலாவத்தைகள். கேவலம், சகலம், சுத்தம் என காரணவத்தைகள் மூன் றுண்டு. அவைகளுக்குத் தனித்தனியே சாக்கிராதி ஐந்து அவத்தைகளுண்டு அவைகாரியா வத்தைக ளெனப்படும்.

## ஐந்தாஞ் சூத்திரம்.

விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்வின் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.

**முதலதிகரணம் :**—*விளம்பிய உள்ளத்து மெய் வாய் கண் மூக்கு அளந்து அறிந்து அறியா,*

**இரண்டாமதிகரணம்:**—(*ஆங்கு அவை போல*) *தாம் தம் உணர்வின் தமியருள்* (*காந்தம் கண்ட பசாசத்து அவையே*).

இ - ள். உயிராலே மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் ஞானேந்திரியங்கள் தங்கள் விடயங்களாகிய சுவை யொளி யூறோசை நாற்றமென்பனவற்றை இஃது இன்னதென்று அளவிட்டறிந்தும், அங்ஙனம் அறியுந் தம்மையும் தம்மை யதிட்டித்து நின்று செலுத்தும் அவ் வுயிரையும் அறியமாட்டா.

அவ்விந்திரியங்களைப் போலவே, உயிர்களும் தம தறிவிற்கு விளக்காயுள்ள முதல்வனது சிற்சத்தியாலே *இருவகை ஐந்தவத்தைகளினின்று வினைப்பயன்களை அறிந்து அனுபவிக்கும் தம்மை

* இருவகை ஐந்தவத்தைகளாவன, கேவலத்தினும் சகலத்தினும் நிகழும் ஐந்தவத்தைகள்.

யும் தம்மைச் செலுத்தி நிற்கும் சிற்சத்தியாகிய அருளையும் அறியமாட்டா. உயிர்கள் அவ்வா றுணர்தல், காந்தத்தின் சந்நிதி மாத்திரையில் அதனால் வலித்துக் கொள்ளப்படும் இரும்பைப் போல, கரணத்தானன்றிச் சங்கற்பத்தான் அதிட்டிக்கும் முதல்வன் சந்நிதி மாத்திரை யினும். ஆகலான் அதுபற்றி முதல்வன் விகாரி யாதலின்று.

---

## ஆறுஞ் சூத்திரம்.

உணருரு வசத்தெனி னுணரா தின்மையி
னிருதிற னல்லது சிவசத் தாமென
விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.

முதலதிகரணம் :—உணருரு அசத்தெனின் உணராது இன்மையின்,

இரண்டாமதிகரணம் :—இருதிறன் அல்லது சிவசத்து ஆம் என இரண்டு வகையின் இசைக்கும் மன் உலகே.

இ - ள். முதல்வன் அளவைகளான் அறியப் படும் பொருளாகில் அங்ஙனம் அறியப்படும் பிர பஞ்சம் போல அழிபொருளாகிய அசத்தாம். ஒருவாற்றானும் அறியப்படாத பொருளாகில் முயற்கோடுபோலச் சூனியமாம். ஆகலான்

இவ்விரண்டு கூறுபாடுமன்றி, ஒருவாற்ருன் அறி யப்படாமையும், ஒருவாற்ருன் அறியப் படுதலு மாகிய இரண்டுவகையானும் சிவமாகிய சத்தா யுள்ள பொருளெனக் கூறுவர் மெய்யுணர்வின் நிலை பெற்றுயர்ந்தோர்.

ஒருவாற்ரு னறியப்படாமையாவது §பாச ஞான பசு ஞானங்களான் அறியப்படாமை.

ஒருவாற்ரு னறியப்படுதலாவது சுட்டிறந் தறிதலாகிய பதிஞானத்தா னறியப்படுதல்.

---

## ஏழாஞ் சூத்திரம்.

யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்
சத்தே யறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா.

**முதலதிகரணம்:**—யாவையும் சூனியம் சத்து எதிர் ஆகலின் சத்தே அறியாது,

---

§ இருவகையாம் மாயையிலுண் டானஞான
மெவ்வளவுண் டவ்வளவும் பாச ஞானம்
மருவியதற் போதத்தாற் சித்தி முத்தி
மதித்தழுந்து நிட்டைபசு ஞானமாகும்
பரவுமிவை யஞ்ஞானம் பாச ஞானம்
பசுஞானஞ் சுதந்தரஹீ னன்ரு னென்றே
யிருவகைஞா னமுநீங்கி யருளா லாவி
யீசனடி கூடலிறை ஞான மாமே.''

**இரண்டாமதிகரணம் :**—*அசத்து இலது அறியாது,*

**மூன்ருமதிகரணம்:**—*இருதிறன் அறிவு உளது இரண்டலா ஆன்மா.*

*இ-ள். வாக்கு மனுதீதமாகிய சிவசத்தின் சந்நிதியில் உணருருவாகிய அசத்தெல்லாம் பாழே யாகலாற் சத்தாகிய சிவம் அசத்தாகிய பாசத்தை அறிந்து அநுபவியாது. அசத்தாகிய பாசம் அறிவில்லாத சடமாகலிற் சத்தாகிய சிவத்தை அறிந்து அநுபவியாது. ஆதலாற் பாரிசேட அளவையால் இருதிற அறிவுள தொன்றுண்டென்பது பெறப்படுதலின், அதுவே சத்தாதற் றன்மையும் அசத்தாதற் றன்மையுமாகிய இரண்டுமன்றிச் சதசத்தாயுள்ள ஆன்மாவாம்.*

*எனவே மேற் கூறிப்போந்த சத்தும் அசத்துமாகிய இரண்டினையும் அறியுந் தன்மைத்தாய், அறிவிக்க அறிவதாகிய உபதேசியாய், நிலைபெற்ற சத்து அசத் திரண்டன்பாலும் அநுபவ அறிவுளதாய் உள்ள அதுவே, சத்தும் அசத்தும் அல்லாத சதசத்தாயுள்ள ஆன்மா. எ-று.*

---

## எட்டாஞ் சூத்திரம்.

ஐம்புல வேடரினயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே.

**முதலதிகரணம்** :—*தவத்தினில் உணர்த்த,*

**இரண்டாமதிகரணம்** :—*தம்முதல் குருவுமாய் (உணர்த்த),*

**மூன்றாமதிகரணம்** :—*ஐம்புலவேடரின் அயர்ந்தனை வளர்ந்து,*

**நான்காமதிகரணம்** :—*விட்டு அன்னிய மின்மையின் அரன்கழல் செலும்.*

*இ - ள். மன்னவ குமாரனுவா னொருவன், பிள்ளைப்பருவத்து மடமையால் வேடருட்பட்டுப் பரதந்திரனுய்த் தன்சாதிக்குரியபெருந்தகைமை யிழந்து இழிதொழில் பயிற்றப்பெற்று வளர்ந்து அவ்வரசனையுந் தன்னையுமறியாது மயக்கமுற்று நிற்க, பின்பு தந்தையாகிய அரசனும், நீ என்மகனென்று அறிவுறுத்தி அவ் வேடரினின்றும் அவனைப் பிரிப்பித்து, பெருந் தகைமையொடுந் தானும் வண்ணஞ்செய்து போற்றுமாறுபோல, தன்னிலையிற் பிறழ்ந்து, நெருங்கிய ஐம்பொறி வேடர் சூழலிற்பட்டு அறிவிழந்து, தன்னை யறியாமையே யன்றித் தலைவனையும் அறியாது நிலை*

பெற்ற ஆன்மா, முன்னே செய்து கொள்ளப் பட்ட புண்ணிய விசேடத்தால், இப்பொழுது தமக்கு அந்தரியாமியாய் உண்ணின்று, இது காறும் உணர்த்திவந்த பரம்பொருளே குருவடிவமுங் கொண்டு எழுந்தருளிச் சிவ தீக்கை செய்து "மன்னவகுமாரனாகிய நீ, ஐம்பொறிக ளாகிய வேடர்களோடு கூடி வைகி வளர்ந்து நின் பெருந் தகைமையை அறியாது மயங்கி இடர்ப்பட்டாய்; நின்பெருந் தகைமையாவது இவ் வியல்பிற்று" என்று அறிவுறுப்ப, அறிந்த மாத்திரையே அவரை விட்டு நீங்கி, அந்நிய மின்றி அநந்நிய மாந் தன்மையி னிலைபெற்று, அம்முதல்வன் றிருவடிகளை அணையும். எ - று.

---

## ஒன்பதாஞ் சூத்திரம்.

ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
யுராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழலாம் பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே.

முதலதிகரணம் :—ஊனக்கண் பாசம் உணராப் பதியை ஞானக் கண்ணினின் சிந்தை நாடி,

இரண்டாமதிகரணம் :—உராத்துனைத் தேர்த்து எனப் பாசம் ஒருவத் தண்ணிழலாம் பதி,

மூன்றாமதிகரணம்:—விதி எண்ணும் அஞ்செழுத்தே.

இ-ள். பசு ஞானத்தானும் பாச ஞானத்தானும் அறியப்படாத முதல்வனை, அம் முதல்வனது ஞானக்கண்ணானே தன்னறிவின்கண்ணே ஆராய்ந் தறிக. அப் பதிஞானத்தைப் பெறுமாறு யாங்ஙனம் எனின், நிலம் முதல் நாதமீறாகிய பாசக்கூட்டம், நின்றுழி நில்லாது பரந்து திரிதற்கண் அதிவேக முடைய பேய்த் தேரினியல்பிற்றாய்க் கழிவதென் றறிந்து நீங்கவே, அப் பதிஞானம் பிறவித் துயராகிய வெப்பத்துக்குக் குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு விளங்கும். அங்ஙனம் விளங்கிய ஞானத்தான் ஞேயத்தைக் கண்ட காட்சி சலியாமைப் பொருட்டு, அப் பொருள் பயக்குந் திருவஞ்செழுத்து அவ்விதிப் படி அறிந்து கணிக்கப்படும். எ-று.

---

## பத்தாஞ் சூத்திரம்.

அவனே தானே யாகிய வந்நெறி
யேக னாகி யிறை பணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

முதலதிகரணம்:—அவனே தானே ஆகிய அந்நெறி ஏகன் ஆகி,

இரண்டாமதிகரணம் :—இறைபணிநிற்க மல மாயை தன்னொடு வல்வினை இன்றே.

இ-ள். ஞானக்கண்ணினிற் சிந்தை நாடப் பட்ட அம் முதல்வன், பொருட்டன்மையால் வேறேபாயினும், வேறு காணப்படாது யானே கண்டேன் என்னும்படி உயிர் தானேயாய் ஒற்று மைப்பட்டு உயிரின் வழி நின்ற அப் பெத்த நிலை போல, ஈண்டுத் தானென வேறுகாணப்படாது அம் முதல்வனேயாம்படி ஒற்றுமைப்பட்டு அவ் விறைபணியின் வழுவாது நிற்பின் "ஊராத் துனைத்தேர்த்தெனப் பாசம்" ஒருவிய வழியும் வாசனையால் வந்து தாக்கும் மலம் மாயை என் னும் இரண்டுடனே வலியகன்ம மலமும் இல்லை யாய்ப் பற்றறக்கழியும். எ-று.

---

## பதினொன்றும் சூத்திரம்.

**காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்**
**காண வுள்ளத்தைக் கண்டு காட்டலி**
**னயரா வன்பி னரன்கழல் செலுமே.**

முதலதிகரணம் :—காணும் கண்ணுக்குக் காட் டும் உளம்போல் காண உள்ளத்தைக் கண்டு காட்டல்,

இரண்டாமதிகரணம்.—(அதனை) அயரா அன்பின் அரன் கழல் செலுமே.

இ-ள், காட்டக் காண்பதாகிய கண்ணுக்கு உருவத்தைக் காணுமாறு பிரிப்பின்றி உடங்கியைந்து நின்று அதற்கு அதனைக் காட்டித் தான் காண்கின்ற ஆன்மாவைப்போல, அறிவிக்க அறிவதாகிய அவ்வான்மா விடயத்தை அறியுமாறு முதல்வன் பிரிப்பின்றி உடங்கியைந்து நின்று, அதற்கு அதனை அறிவித்துத் தான் அறிந்து வருதலான், இவ்வாறு அத்துவிதமாய் நின்று உதவி செய்துவரும் பெருங்கருணையை மறவாது கடைப்பிடித்துச் செய்யும் அன்பானே, அம்முதல்வன் றிருவடியாகிய சிவானந்தாநுபூதியைத் தலைப்படும். எ-று.

---

## பன்னிரண்டாஞ் சூத்திரம்.

செம்மலர் நோன்றள் சேர லொட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே.

முதலதிகரணம்:—செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா அம்மலம் கழீஇ,

இரண்டாமதிகரணம்:—அன்பரொடு மரீஇ,

**மூன்றாமதிகரணம்** :—மால் அற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே,

**நான்காமதிகரணம்** :—ஒழிபு.

இ-ள். "அபரா வன்பி னரன்கழல்" அணைந்த சீவன் முத்தன், செங்கமல மலர்போல விரிந்து விளங்கிய முதல்வனது சீபாதத்தை அணைதற்கு உடம்படாது அயர்த்தலைச் செய்விக்கும் அவ்வியல்பினையுடைய மும்மல வழுக்கை ஞானநீராற் கழுவி, தன்னைப்போல் அயரா வன்பின் அரன்கழ லடைந்த மெய்ஞ் ஞானிகளோடு கலந்து கூடி, அவ்வாறு கழுவப்பட்டு மலமயக்கு நீங்குதலான் அன்பரொடு மரீஇ, அன்பு மிக்குடைய அவரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் முதல்வன் எனவே கண்டு வழிபட்டு வாழ்வான். எ-று.

குறிப்பு :—இவ்வதிகரணங்களையே சூரணிகள் குறித்தலின் அதிகரண எண்களின் அடைவே சூரணிகளுக்கும் ஆகும்.

——

## சூரணிப் பொருள்.

## பொது வதிகாரம்.

---

### I. பிரமாணவியல்.

### முதற் சூத்திரம்.

**1.* சகம் பிறப்பிருப்பிறப்பாகிய முத்**
**தொழிலை யுடையது. (1) †**

*உலகாயதரையும் மீமாஞ்சகரையும் மறுத்தது.*

*இ-ள். காட்சியளவைக் கெய்தாது உரைப்பன வெல்லாம் பிரமாணமாகா என்ற உலகாயதரையும், காட்சி அநுமானம் உரை எனும் அளவைகளால் உலகிற்குத் தோற்றக் கேடுகளதுண்மை அறியவாராமையின் உலகு நித்தப் பொருளேயாமெனும் மீமாஞ்சகரையும் மறுத்து, காட்சி முதலிய மூன்றனும் உலகிற்குத் தோற்றம் நிலை இறுதியாகிய முத்தொழில்களுண்மையைச் சாதித்தது.*

**2. அது அரனாலே உடையது. (2)**

*புத்தர், சாங்கியர், பாஞ்சராத்திரிகள், பரிணாமவாதி, மாயாவாதி, சிவாத்துவிதசைவர், ஆகிய இவர்களை மறுத்தது.*

---

* சிவஞானபோதத்து அதிகரணங்களினிலக்கம்.

† சூரணியிலக்கம்.

இ-ள். உலகம் உள்ளதாயின் உள்ளதற்கு உண்டாக வேண்டுவதில்லை யாகலாற் சற்காரிய வாதம் அடாதெனும் புத்தனையும், இல்லது முள்ளதும் அல்லாத பொருள் தோன்றும் எனும் சூனியான்ம வாதியையும், இல்லதும் உள்ளதுமாய பொருள் தோன்றும் எனும் அநேகாந்தவாதியையும், பிரமத்தினின்று உலகந்தோன்றும் எனும் பரிணமவாதியையும், மாயை அநிர்வசனமாயுள்ளதெனும் மாயாவாதியையும், மாயை முதல்வனின் வேறு பொருள் அன்றெனும் சிவாத்துவித சைவரையும் பாஞ்சராத்திரியையும் மறுத்து, உலகத்தை அதன் காரண மாயையில் சங்கற்பத்தான் ஒடுக்கி அம்மாயைக்கு ஆதாரமான தனது சத்தியால், சங்கற்பத்தானே மீளத் தோற்றுவிக்கும் சங்கார காரணனே உலகிற்கு முதல்வன் எனச் சாதித்தது.

3. மற்றிருவரும் முத்தொழிற்படுவர்கள். (3)

அநேகேசுரவாதி, சிவசமவாதி, சங்கிராந்தவாதி, உற்பத்திவாதி, ஆவேசவாதி ஆகிய இவர்களை மறுத்தது.

இ-ள். பிரகிருதி மாயாந்தம் சிருட்டி திதிகளைச் செய்யும் கர்த்தர்கள், அதற்குமேலுள்ள சுத்தமாயாந்தம் சங்கரிக்கும் சுட்டுணர்வின்றி வியாபித்தறிகின்ற சங்கார காரணன் ஏவல்வழி

தத்தம் தொழில்களை யியற்றுவராதலால், அவர்களை ஏவுஞ் சுதந்தரனான அச்சங்கார காரணனே முதல்வனென வலியுறுத்தி, அதற்கு மாறுகக் கூறும் அநேகேசுரவாதி, சிவசமவாதி, சங்கிராந்தவாதி, உற்பத்திவாதி, ஆவேசவாதி இவர்களை மறுத்தது.

---

## இரண்டாம் சூத்திரம்.

1. அரன் உயிர்களின் இரண்டற நிற்பன். (4)

பேதவாதி, அபேதவாதி, பேதாபேதவாதி எனும் இவர்களை மறுத்தது.

இ-ள். சங்காரகாரணனாகிய முதல்வனும் உயிர்களும் அத்துவிதமாய்க் கூடி நிற்குமுறைமை, பொன்னும் பணியும்போல் அபேதமெனக் கூறும் மாயாவாதியையும், இருளும் ஒளியும்போற் பேதமெனக் கூறும் மாத்தியமிகரையும், சொல்லும் பொருளும்போற் பேதாபேதமெனக் கூறும் பாஞ்சராத்திரிகளையும் மறுத்து, முதல்வன் உயிர்களிடத்து, கலப்பினால் உடலின் உயிர்போல் அவ்வுயிர்களேயாய், பொருட்டன்மையால் கண்ணின் அருக்கன்போல் அவற்றின் வேறுமாய், உயிர்க்குயிராதற் றன்மையால் கண்ணொளியின் ஆன்மபோதம்போல் உடனுமாய், இரண்டறக் கூடி நிற்பனென்று வலியுறுத்தியது.

2. உயிர்களுக்குக் கன்மபலனை அரனே கொடுப்பன். (5)

*பரிணாமவாதிகளை மறுத்தது.*

*இ-ள். முதல்வன் அவ்வாறு உயிர்களோடு கூடி நின்று புனருற்பவஞ்செய்யுங்கால், உலகத்துக் காரியங்களுக்குப்போல அவனுக்குத் துணைக்காரண முதலியன வேண்டப்படின், அம் முதல்வனது சுதந்தரத்திற்கும் அளவிலாற்றற்கும் இழுக்காய் முடியுமாகலின், அவனுக்கு அவை வேண்டப்படாவெனக் கூறும் பரிணாமவாதிகளை மறுத்து, முற்பிறவிகளின் ஆன்மாக்களா னீட்டப்பட்டு மாயையிற் கட்டுப்பட்டுக்கிடந்த இருவினைகளுக்கீடான பலன்களை, அவ்வான்மாக்களுக்குத், தனது ஆணையென்னும் பரியாயப் பெயருடைய சிற்சத்தியாற் கொடுப்பனென வலியுறுத்தியது.*

3. உயிர்கள் அச்சுமாறியே பிறக்கும். (6)

*கிரீடாப்பிரமவாதி, சிவாத்துவிதசைவர், சாங்கியர் எனும் இவர்களை மறுத்தது.*

*இ-ள். குடமுடைந்தவழிக் குடாகாயம் மகாகாயத்தோடு கூடுமாறு போல, உடம்பு நீங்கியவழி உயிர் பிரமத்தோடு கூடுவதன்றி இறந்தவுயிர் மீளப் பிறப்பதில்லையெனக் கூறும் கிரீடாப்பிரமவாதியையும், இருவினையின் வரும் புனருற்*

பவம் உயிரின் பொருட்டுச் சிவத்துக்கேயாமெனக் கூறும் சிவாத்துவித சைவரையும், மூலப்பகுதியிற் றேன்றும் புத்தி தத்துவத்திற்கே புனருற்பவமெனக்கூறும் சாங்கியரையும் மறுத்து ஆன்மாக்களே இறந்து பிறந்து வருமென வலியுறுத்தியது. ஈண்டு அச்சுமாறிப் பிறக்கு மென்பது உயிர்கள் தமக்கு முன் உள்ள உடலழிய வேறு உடலை எடுக்கும் எனப் பொருள் தந்து நின்றது. இறத்தல்=பிரிதல்.

4. அரன் சருவ வியாபகன்; (ஆதலிற் றன தாணையி னீக்கமின்றி நிற்பன்.) **(7)**

நையாயிகர் மீமாஞ்சகர் முதலியோரை மறுத்தது.

இ-ள். அங்ஙனம் உயிர்கள் புனருற்பவமாதற் கேதுவாய் இருவினைகளைச் செலுத்தி நிற்பதாகிய சிவசத்தியானது முதல்வனின் வேறே அன்றேவென்னும் ஐயப்பாட்டின்கண், பொருட்குச் சத்தி வேறென்னும் மீமாஞ்சகர் முதலியோரையும், அன்றென்னும் நையாயிகர் முதலியோரையும் மறுத்து, முதல்வன் சர்வ வியாபியாகலின் தன தாணையாகிய சிற்சத்தியோடு நீக்கமின்றி ஞாயிறு மொளியும்போலச் சமவேதமாய் நிற்பனென வலியுறுத்தியது.

இதனுல் அரன் சர்வவியாபக னென்பதும், ஆதலிற்றன தாணையாகிய சிற்சத்தியோடு சமவேதமாய் நிற்பன் என்பதும் பெறப்பட்டது.

---

## மூன்றும் சூத்திரம்.

1. இல்லையென்கிற அறிவுடனே சொல்லுகையி னாலே அறிவுயிர் உண்டு. (8)

*சூனியான்மவாதிகள், மாத்தியமிகர் எனும் இவர் களை மறுத்தது.*

*இ-ள். ஆன்மா சூனியமே என்னும் மாத் தியமிகர், சூனியான்மவாதி ஆகிய இவர்களை மறுத்து, உடல் பொறி விடயம் அனைத்தினையும் முறையானே இஃதான்மா வன்று, இஃதான்மா வன்றென விட்டு, ஆன்மாவிலதென்று நிற்ப தோர் அறிவுண்மையின், அஃதே ஆன்மாவா மெனக்கூறி, உயிருண்மையை வலியுறுத்தியது.*

2. எனது உடல் என்று பொருட்பிறிதின்கிழமை யாகச் சொல்லுகையினாலே, உடற்கு வேறாய் உயிர் உண்டு. (9)

*தேகான்மவாதியை மறுத்தது.*

*இ-ள். உடம்பே ஆன்மா வெனக் கூறும் உலோகாயதருள் ஒரு சாராராகிய தேகான்ம வாதிகளை மறுத்து, என் பதி என் மனை யென்றாற் போல எனது உடல் என்று பொருட்பிறிதின் கிழமையாகக் கூறி நிற்பதொன்று உளதாகலின், அதுவே அவ்வான்மாவாம் எனக்கூறி உயிருண் மையை வலியுறுத்தியது.*

3. ஐந்தையும் ஒருவனே அறிதலின், ஒவ்வொன்றை மாத்திரம் அறிகிற ஐந்திற்கு வேறாய் உயிர் உண்டு. (10)

*இந்திரியான்மவாதியை மறுத்தது.*

*இ-ள். செவி, துவக்கு, நோக்கு, நாக்கு, மூக்கு எனும் ஐம்பொறிகள் ஓசை, பரிசம், உருவம், சுவை, நாற்றங்களாகிய ஐம்புலன்களை அறியுமென்றல் எல்லார்க்கும் ஒப்ப முடிந்தமையின், அவையே உயிரெனக் கூறும் உலோகாயதருள் ஒரு சாராராகிய இந்திரியான்மவாதிகளை மறுத்து, ஐம்புலன்களாகிய ஓசை பரிசம் உருவம் சுவை நாற்றங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்ததொன்றறியாமையினானும், ஒரே காலத்தில் ஒருங்கே தத்தம் புலன்களை யறியாமையினானும், இவ்வைந்தினானும் ஐம்பயனுமறிவதொன்றுளதாகலின், அதுவே அவ்வான்மாவாம் எனக்கூறி உயிருண்மையை வலியுறுத்தியது.*

4. கனவுடலை விட்டு நனவுடலிலே வருகையினாலே, அக்கனவுடற்கு வேறாய் உயிர் உண்டு. (11)

*சூக்கும தேகான்மவாதியை மறுத்தது.*

*இ-ள். புரியட்டகவுடம்பாகிய சூக்கும தேகமே அகத்தே நின்று இந்திரியங்களைப்புறத்திற் செலுத்திப் புலன்களை அறியுமெனக்கொண்*

டு, அதுபற்றி சூக்குமதேகமே ஆன்மாவெனக் கூறும் உலோகாயதருள் ஒரு சாராராகிய சூக்கும தேகான்ம வாதிகளை மறுத்து ஐம்பொறிகளும் ஒடுங்கின சொப்பனத் தானத்தின் நிகழ்ந்தவற்றை யறிந்தும், கனவு கண்டாமென்றும் கண்டிலம் என்றும் நனவின்கண் மயங்கியறிந்து நின்று வரும் பொருளொன்றுண்டாயின் அதுவே அவ்வான்மாவாமென வலியுறுத்தி உயிருண்மையைச் சாதித்தது.

5. **நித்திரையிலும் பிராணவாயுத் தொழில் பண்ணவுஞ் சரீரத்துக்குப் புசிப்புந் தொழிலும் இல்லாதபடியினாலே, பிராணவாயுவுக்கு வேறாய் உயிர் உண்டு.** **(12)**

பிராணான்மவாதியை மறுத்தது.

இ-ள். சொப்பனத்தான மாத்திரையினன்றித் தொழிற்படாத சூக்குமதேகம் போலன்றிச் சுழுத்தித்தானம், துரியத்தானங்களினும் தொழிற் படுவதாகிய பிராணவாயுவே, அடங்குதல் விடுதல் செய்தறிவதாகிய ஆன்மா வாகுமெனக் கூறும் உலோகாயதருள் ஒரு சாராராகிய பிராணான்மவாதிகளை மறுத்து, துயிலிடத்து பிராணவாய்வு இயங்கவும், விடயங்களிடமாகவரும் இன்பத்துன்ப நுகர்ச்சியும் உடம்பு சேட்டித்தலும் இன்மையால், பிராணவாயுவின் வேறாய் ஆன்மா

*உண்டென வலியுறுத்தி உயிருண்மையைச் சாதித்தது.*

6. மறந்து மறந்து நினைக்கிறபடியினுலே, மறவாமல் இருக்கிற அானுக்கு வேறாய் உயிர் உண்டு. (13)

*விஞ்ஞானான்ம வாதியை (மாயாவாதியை) மறுத்தது.*

*இ-ள். பிரமப்பொருள் மேற்கூறிப்போந்த சடப்பொருள்கள் போலன்றிச் சித்தாகலான் அதுவே உயிராகுமெனக் கூறும் விஞ்ஞானான்மவாதிகளாகிய மாயாவாதிகளை மறுத்து, கருவிகளோடு கூடியவழியுந் தன்னியல்பை உணருந் தன்மையில்லாத ஆன்மாவைப்போல, அம்முதல்வன் மறந்து மறந்து அறிதலின்றி, அறிந்தவாறே அறிந்து நிற்கும் பேரறிவுடையனென வேதாகமங்களான் அறிவிக்க வறிந்து குரவனறிவுறுக்கும் உபதேசமொழியைப் பெற்றுடையதாய் நிற்பதொன்றுளதாகலின், அதுவே ஆன்மாவாகுமென வலியுறுத்தி உயிருண்மையைச் சாதித்தது.*

7. எல்லாத் தத்துவங்களுக்கும் வேறு வேறு பெயர் இருக்கையினுலே, அந்தந்தத் தத்துவங்களுக்கு வேறாய் உயிர் உண்டு. (14)

*சமூகான்மவாதியை மறுத்தது.*

*இ-ள். உடம்பு முதலியவற்றுள் ஒரோவொன்றே ஆன்மாவாதல் இன்றென்றதொக்கும்,*

அவற்றுள் ஒன்று குறைந்த வழியும் அறிவு நிகழாமையானும், எல்லாங் கூடியவழி அது நிகழ்தலானும், அனைத்துங்கூடிய சமுதாயமே உயிராதலமையுமெனக் கூறும் சமூகான்ம வாதியை மறுத்து, மாயாகாரியங்களான் யாக்கப்பட்டியன்ற சூத்திரப்பாவை போன்ற உடம்பின் கண்ணே, மாயாகாரியங்கள் ஆன்மாவெனப் பெயர் பெறுமாறின்றி, தனித்தனி வேறு வேறு பெயர்பெற்று நிற்பன வாகலான், அவற்றிற்கு வேறாய் (மாயாவியந்திர தனுவினுள்) ஆன்மா உண்டு என வலியுறுத்தி உயிருண்மையைச் சாதித்தது.

---

## II. இலக்கண வியல்.

### நான்காஞ் சூத்திரம்.

1. அந்தக்கரணங்களுக்கு உயிர் உட்கூடினலன்றித் தொழில் இல்லாதபடியினலே அந்தக் காரணங் களுக்கு வேறாய் உயிர் உண்டு. (15)

*அந்தக்கரணான்மவாதியை மறுத்தது.*

இ-ள். ஏனைய கருவிகளெல்லாம் வெவ்வேறு பெயர்பெற்று நிற்பனவாகலான் உயிராகாவாயினும், மன முதலிய அந்தக்கரணங்கள், "சிந்தையைச் சீவனென்றுஞ் சீவனைச் சிந்தையென்றும்" கூறுமுறைபற்றி, உயிரென்னும்

பெயரானும் வழங்கப் படுதலுண்மையின், அவையே ஆன்மாவென்றல் அமைவுடைத்தெனக் கூறும் உலோகாயதரில் ஒரு சாராராகிய அந்தக் கரணான்ம வாதிகளை மறுத்து, தத்துவங்களை (கருவிகளை) நோக்கிச் சித்தாய் நின்றே தன்னை நோக்கி அசித்தாய் நிற்றலான், உயிரான் அதிட்டிக்கப்படாதவழி தொழிற் செய்யாத அந்தக் கரணங்களாகிய மனம் புத்தி சித்தம் அகங்காரம் எனுமிவைகளுக்கு வேறாய் (ஆன்மாவாகிய) தனக்குக் கீழுள்ள தத்துவங்களை நோக்கியும் தன்னை நோக்கியும் சித்தாய் நிற்பதாகிய ஆன்மா உண்டு என வலியுறுத்தி உயிருண்மையைச் சாதித்தது.

2. மலமறைப்பால் உயிருக்கு அறிவு இல்லை. (16)

ஆணவ மலத்தினிலக்கணங் கூறி, அந்தக்கரணான்மவாதி, ஐக்கவாதசைவர் முதலியோரை மறுத்தது.

இ-ள். ஆன்மா அந்தக் கரணங்களின் ஒன்றன்றாயின், அவற்றொடு கூடி நிற்றற்குக் காரணம் என்னை? என வினவும் அந்தக்கரணான்மவாதியை நோக்கி, உயிர் முதல்வனைப் போல் அந்தக்கரண முதலியவற்றின் வேறாய சேதனப் பொருளாயினும், செம்பிற்களிம்பைப்போல வேறு காரணமின்றித் தன்னோடு உடனாய் நிற்கும் மூலமலமாகிய ஆணவமலத்தான் தனது

ஞானம் மறைப்புண்டு, கருவிகளைக் கூடி நின்றுணருமாறன்றித் தன்னியல்பானுணரு மாறின்றெனக் கூறியும், ஆகந்துகமலங்களாகிய மாயா கன்ம மலங்களே ஆன்மஞானத்தை மறைத்தல் அமையும் அவற்றிற்கு வேறாய் மூலமல மென்னோர் மல முண்டென்றல் மிகையாமெனக் கூறும் ஐக்கவாத சைவரை நோக்கி, அறியாமையைச் செய்தலாகிய கேவலத்தினிகழுமியல்பே ஆணவ மலத்திற்குத் தன்னியல்பென்றும், காட்டாய் நின்று விடயங்களை யறியும் வண்ணம் உயிரின் அறிவை ஏகதேசமாய் விளக்கும் மாயாகாரியங்களாகிய கருவிகளோடு கூடி அவத்தை யுறுவதாகிய விபரீத வுணர்வைச் செய்யும் சகலத்தினிகழுமியல்பே பொது வியல்பென்றும் கூறியும், ஆணவமலத்தினிலக்கணத்தைச் சாதித்து அந்தக் காரணங்களுக்கு வேறாய் உயிர் உண்டென வலியுறுத்தியது.

3. உயிர் மூன்றவத்தைப்படும். (17)

ஆன்மா பஞ்சாவத்திதனாய் கேவல சகல சுத்த மெனும் மூன்று அவத்தைகளில் நிற்குமெனக் கூறிச் சாங்கியரை மறுத்தது.

இ-ள். மறைக்கப்பட்ட கண் விளக்கோடு கூடியவழி விடயங்களைக் காண்டலேயன்றி வெவ்வேறவத்தைப் படுமாறு இல்லை, அதுபோல

மலத்தான் மறைக்கப்பட்ட உயிர் கருவிகளோடு கூடியவழி ஒரு தன்மைத்தாய் அறிதலே அமைவுடைத்து; அவ்வாறன்றி மேலைச் சூத்திரத் தோதிய முறையின் ஐம்புலனறிந்தும், ஒடுக்கமறிந்தும், உண்டிவினையின்றிக் கிடந்தும், உணர்த்த வுணர்ந்தும், இங்ஙனம் வெவ்வேறு அவத்தைப்படுமாறு யாங்ஙனம் எனக் கூறும் சாங்கியரை மறுத்து, அந்தக்கரணங்களோடு கூடிய ஆன்மா, மலவடிவின் மறைப்புண்ட வழி அருவுடம்பாகிய தத்துவ சொரூபியாய், அமைச்சரசேய்ப்ப நிற்றலான், படைகொடு பவனி போதும் வேந்தன் கடைதொறும் விட்டு விட்டுக் காவலுமிட்டு அந்தப் புரத்திற் செல்லுமாறு போலச், சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியம் துரியா தீதமாயுள்ள பஞ்சாவத்திதனைப், கேவல சகல சுத்தமெனும் மூன்றவத்தைகளின் பாற்படுவன் என வலியுறுத்தி, ஆன்மாவின் "தன்னுண்மை" என்னும் கேவலத் தியல்பை விளக்கியது.

---

## ஐந்தாஞ் சூத்திரம்.

1. உயிராலே தத்துவங்களெல்லாந் தொழில் செய்யும். (18)

இந்திரிய வுணர்ச்சி ஆன்மாவுக்கே யெனக் கூறிச் சாங்கியரை மறுத்தது.

இ-ள். தாமரையிலையினீர்போல் ஆன்மா பற்றற்று நிற்ப, ஆன்மாவின் சந்நிதியிற் புத்தி தத்துவமே ஐம்பொறி வழியான் விடயங்களை அறியுமென வமையும், அவ்வாறன்றிக் கருவிக ளோடு கூடி ஆன்மாவே அவத்தைப்படுமென மேற்கூறிய தமையுமா றென்னையெனக்கூறும் சாங்கியரை நோக்கி, அவ்வைம் பொறிகளோடும் ஈசுரப்பிரேரகனாகிய உயிர் ஒற்றுமைப்பட்டு நின் றறிந்தாலன்றி அவை யொரு விடயத்தையும் விடயிக்கமாட்டா வாகலான், உணர்விற்கு ஏது வாகிய அவ்வைம் பொறிகள் ஆன்மாவாலுணரு மென வலியுறுத்தியது.

2. அானுலே உயிர்களெல்லாம் அறியும். (19)

ஆன்மாத்தனது முதலாலேயே உணருமெனக் கூறி ஈசுரவவிகார வாதியை மறுத்தது.

இ-ள். கருவிகள் சடமாகலிற் சித்தாகிய உயிரானன்றி விடயித்தலமையாவாயினும், சித் தாகிய உயிர் முதல்வனது உபகாரத்தை அவாய் நிற்பதன்று, அவாவுமாயின் முதல்வனும் அவ் வாறே பிறிதொன்றன் உபகாரத்தை அவாவு மெனப்பட்டு, மேலும் மேலும் வரம்பின்றி யோடுமெனக் கூறும் ஈசுரவவிகார வாதி முதலி யோரை நோக்கி ஆன்மா, தன்னாலே விடயங் களை உணரும் பொறிகளைப்போல, சடமும்

சேதனமுமாய வேறுபாடு பற்றித் தம்முள் ஒவ்வாவாயினும், தம்மையும் தமது முதலையும் அறியமாட்டாமைக்கண் ஐம்பொறியும் ஆன்மாவும் தம்முள் ஒக்குமாகலின், தனது சந்நிதியின் அசத்தெல்லாஞ் சூனியமாகலான் அவற்றை அநுபவியாத முதல்வனால் ஐயுணர்வுகளை உணர்ந்தும் அவ்வாறுணருந் தன்னையும் தனக்குக் காட்டாகிய முதல்வனையும் அறியாதென்றது.

---

## ஆறுஞ் சூத்திரம்.

1. உயிரறிவினாலே அறியப்பட்டதெல்லாம் அழியும். (20)

ஆன்மாவின் சுட்டுணர்வினால் அறியப்பட்ட சுட்டுப் பொருள்களெல்லாம் அசத்தேயாமென வலியுறுத்தி, நையாயிகரையும் சாங்கியரையும் மறுத்தது.

இ-ள். பிரபஞ்சத்தைப் போல முதல்வனும் அளவைகளான் அளந்தறிபொருளே யாமெனக் கூறும் நையாயிகரையும், எல்லாப் பொருளுஞ் சத்தாகலின் அளந்தறி பொருளுஞ் சத்தேயாமெனக் கூறுஞ் சாங்கியரையும் மறுத்து, ஒன்றைமுற்பட்டு அதுவதுவாகச் சுட்டிக்காணும் அளவை யறிவாகிய ஆன்மாவின் சுட்டறிவினால் அறியப்பட்ட சுட்டுப் பொருள்களெல்லாம்

நீரிலெழுத்தும் நிகழ்கனவும்பேய்த்தேரும்போல அப்போதுள்ளனவாய் இத்துணைப்பொழுது நிற்குமென அறியவாராது நிலைபெறுவது போலத் தோன்றி, விரைவின் மறைந்து போகுந் தன்மையவான சிறப்புப் பற்றி அசத்தேயாமென வலியுறுத்தியது.

2. அப்பிரமேயமாக அறியப்பட்டவனே அரன். (21)

சிவம் வாக்கு மனாதீத கோசரமென்று வலியுறுத்தி மாயாவாதிகள், நையாயிகர், பாதஞ்சலர், சமவாத சைவர், சிவாத்துவிதசைவர் முதலியோரை மறுத்தது.

இ-ள். சுட்டியுணர் பொருள் அசத்தும், ஒருவாற்றானும் உணரப்படாத பொருள் சூனியமுமாயின், இவ்விரண்டிற்கும் வேறாய முதல்வனதியல்பு அநிர்வசனம்போலும் என்றும், பரமார்த்தமாகிய பரப்பிரமப் பொருள் அவிச்சைவயத்தான் ஞாதாவெனவும், ஞேயமெனவும் பகுக்கப்பட்டு ஏற்ற சாதகங்களினின் றறியப்படினும், அவிச்சை நீங்கியவழி அப்பகுப்பின்மையாற், சத்தென்றாதல் அசத்தென்றாதல் ஒருவாற்றானும் ஞேயமாமாறின்றிக் கேவலஞானமாத்திரையேயாய் நிற்பதொன்றாகலான், அது கோசரமாகாதென்றுங் கூறும் மாயாவாதியையும், பிரகாசித்த பொருளை வேறோராற்றான் அறியப்

புகின், அது அவ்வாற்ருற் புதுவதாய்ப் பிரகாசிக்க வேண்டுதலிற், பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்க வேண்டுவதில்லையெனு முறைபற்றி, பதிப்பொருள் வாக்கு மனுதீத மென்றல் பொருந்தாதெனும்மையாயிகரையும், யோகநூலிற்கூறப்படும் தியான பாவனைகளிற் பதிப்பொருள் கோசரமாமென்றலே அமைவுடைத்தெனக் கூறும் பாதஞ்சலரையும், உயிர் பசுத்துவ நீங்கிய காலத்துச் சிவனைப்போல முற்றுமுணர்தன் முதலிய எண் குணங்களுடையதென்று ஆகமங்களுட் கூறுதலின், ஆண்டு ஆன்மஞானம் சிவஞானத்தோடொப்பதன்றிப் பசுஞானமெனப் படாமையான், பதிப்பொருள் அவ்வறிவான் அறியப்படும் கோசரப்பொருளென்னலே அமைவுடைத்தென்னுஞ் சிவசமவாதியையும், முதல்வனைத் தலைப்பட்ட உயிர் அம்முதல்வனேடு ஒன்றாய்ப் போவதேயாகலின், ஆண்டு அங்ஙனம் அறிவதூஉம் அறியப்படுவதூஉமாதல் இல்லையெனக்கூறும் சிவாத்துவித சைவரையும் சுத்த சைவரையும் மறுத்து, வாக்கெனப்படும் நாதம் முடிவான பாசஞானத்தானும் உபசாரம்பற்றி மனமெனப்பெயரிய பசுஞானத்தானும் அறியப்படாது, அவற்றிற் கதீதமாய அருண்ஞானத்தான் அதனேடு ஒற்றுமைப்பட்டு நின்றுணரும் அநுபவஞான மாத்திரைக்

கே கோசரிப்பதாயுள்ளது, வாக்குமனுதீத கோசரமாகிய சிவசத்தாகும் பதிப்பொருளென வலியுறுத்தியது.

---

## உண்மை அதிகாரம்.

---

### III. சாதனவியல்.

### ஏழாஞ் சூத்திரம்.

**1. ஆன் பாசத்தை அநுபவியான். (22)**

வாக்கு மனுதீத கோசரமாய்ச் சுட்டுணர்வின்றி நின்றறியப்படுஞ் சிவத்தின் முன்னர், சுட்டியறியப் படும் அசத்தாகிய பாசம் விளங்கித் தோன்றாதென வலியுறுத்தி சிவாத்துவித சைவரை மறுத்தது.

இ-ள். "தந்திடுஞ் சிவன வன்றன் சந்நிதி தன்னினின்றே" எனக் கூறப்படும் இயல்புடைய பிரபஞ்சத்தைச் சத்தெதிர் சூனியமென்றல் அவசித்தாந்தமாய் முடியுமெனவும், முற்றுணர்வுடைய சிவத்துக்கு அசத்தை விடயிப்பதாகிய சுட்டுணர்வும் உண்டென்றூறப்படும் இழுக்கு என்னை எனவும், சுட்டுணர்வின்மையான் முதல்வன் அசத்தை அறியானெனின் முற்றுணர்வுடைமைக்கு இழுக்காமெனவுங் கூறும் சிவாத்துவித சைவரை மறுத்து, தன்னியல்பாகிய

இயற்கை யுணர்வின் முன்னர்ப் பொதுவியல் பாகிய செயற்கைச் சுட்டுணர்வு பிரகாசித்து நில் லாமையானும், அசத்தை விடயிப்பதாகிய ஏக தேச வுணர்வு முற்றுணர்வைத் தடுப்பதாகலான், அஃது இல்லாமை முற்றுணர்விற்கு மேம்பாடா வதன்றி இழுக்காகாமையானும், சுட்டுணர்வின்றி நின்றறியுஞ் சிவசத்தின் முன்னர்ச் சுட்டியறியப் படும் அசத்தாய பிரபஞ்சம் விளங்கித் தோன்று தென வலியுறுத்தி, முதல்வன் பாசத்தை யநு பவியான் எனச் சாதித்தது.

2. பாசம் அறியாது அநுபவியாது. (23)

தத்துவப் பிரபஞ்சமானது பொதுமையான் நோக் கும்வழி அறிவுடையது போலத்தோன்றினும் அறி வில்லதேயாமென வலியுறுத்தி, சிவசங்கிராந்தவாத சைவரை மறுத்தது.

இ-ள். சத்து அசத்தை யறியாதாயினும், அசத்து எனப்பட்ட தநுகரண புவன போகங்க ளுள் ஒன்றாய கரணம், விளக்கைப்போல் விகார மின்றி நிற்கும் ஆன்ம சந்நிதியில், பெத்தநிலைக் கண் அசத்தாய விடயங்களை அறிந்தாற்போல, முத்திநிலையிற் சிவகரணமாய் நின்று சிவத்தை அறியுமெனவும், கண்ணாடியினிழல்போல ஆன்ம சந்நிதியின் அதன்கண் அறிவுண்டாமெனவும்,

பதிஞான பசுஞானங்களோடொப்பப் பாசஞான மொன்றென வைத்து எண்ணப்படும் உரிமையு டைய அதனை அறிவுடைத் தன்றென்றல் பொ ருந்தாதெனவும், கூறும் சிவசங்கிராந்த வாத சைவரை மறுத்து, பாசம் வாயிலாக உயிரின் கண் நிகழும் ஞானமே பாசஞானம் என்று உப சரித்துக் கூறப்படும் என்றும், அதனைத் தூல மாய் நோக்கும்வழி அவ்வசத்தினுக்கு உள்ளது போலத் தோன்றினும், ஐயந்திரிபின்றி மாசறு காட்சியான் ஆராயும்வழி அதன் கண் அந்த ஞானம் இல்லையெனவும் கூறி, அசத்தினுக்கு உணர்வின்றென வலியுறுத்தி, பாசம் முதல்வனை அநுபவியாதெனச் சாதித்தது.

3. உயிர் அவ்வானை அடையும், அநுபவிக்தும். (24)

சத்தையும் அசத்தையும் அறிவிக்க அறியுந்தன் மைத்தாய், அவ்விரண்டின்கண்ணும் நிலைபெற்ற அநுபவ அறிவுடையதே சதசத்தாகிய ஆன்மாவென வலியுறுத்தி, சிவசமவாத சைவர், ஈசுவராவவிகார வாத சைவர், ஐக்கியவாத சைவர், சிவாத்துவித சைவர், சிவசங்கிராந்தவாத சைவர், பாடாணவாத சைவர், பேதவாத சைவர், ஆகிய இவர்களை மறுத்தது.

இ-ள். சிவசத்தின் றன்மையே உயிர்க்குத் தன்மையாவதன்றி வேறில்லையாகலிற் சத்தே

அசத்தை அறியுமென்னுஞ் சிவாத்துவித சைவ ரையும், உயிர்க்குத் தன்மையென்ப தொன்றின் மையின் அசத்தே சத்தை அறியுமென்னுஞ் சிவ சங்கிராந்தவாத சைவரையும் மறுத்து, சத்தும் அசத்துந் தம்முளறியு மாறில்லையென மேற் சாதித்தவழி, இரண்டும் இவ்வாருயின் இவற்றை யறியும் பொருள் வேறு யாது என வினவுமவரை நோக்கி, இவ்விரண்டினையும் அறிவதாய் உபதேசி யாய் உள்ளது ஆன்மாவே யென விடையிறுத் தவழி, உயிர் அறிவிக்க வேண்டாது தானேயறியு மியல்பிற்றென்னுஞ் சிவ சமவாத சைவர், ஈசுரவ விகாரவாத சைவர், ஐக்கவாத சைவர் முதலி யோர்களையும், ஆன்மாவினறிவு சத்தோடு கூடு மாறில்லை யென்னும் பாடாணவாத சைவர் பேத வாத சைவர்களையும் மறுத்து, தம்முள் ஒன்ரு ஞென்று அநுபவிக்கப்படாத ஞாயிற்றையும் விட யத்தையும் அநுபவிக்குங்கண்போல, அசத்தான் விளங்கி அசத்தை அறிவுழி அசத்தின்பாலும், சத்தான் விளங்கிச் சத்தை அறிவுழிச் சத்தின் பாலும், அதுவதுவாய் அழுந்தி அவ்விரண்டனை யும் அநுபவிக்கும் அறிவுளது சத்தும் அசத்து மல்லாத சதசத்தாகிய ஆன்மாவென வலியுறுத் தியது.

---

## எட்டாஞ் சூத்திரம்.

1. உயிருக்கு நல்லறிவு தவத்தினாலேயேவரும். (25)

குரவன் உணர்த்தியவாறு சிவஞானங் கண்ணுகக் கொண்டு அறிவதாகிய சாதனவறிவும் அது வருவாயும் படிமுறையானன்றி, இவ்வொரு பிறவியிற்செய்த தவத் தானே யெய்துவதாரிதென்பதனை வலியுறுத்தி, இவற்றை வேறுவேருகக் கூறும் சமயத்தாரை மறுத்தது.

இ-ள். சாதித்துப் பெறுதற்கு உரிய அதிகாரமுடையதென நிச்சயிக்கப்பட்ட உயிராகிய சாதகராற் செய்யப்படுஞ் சாதனமும் அது வருவாயும் வேறு வேருகக் கூறுஞ் சமயத்தாரையும், வேதத்துட் கூறப்பட்டவேள்வி முதலாயினவே தத்துவ ஞானத்தைக் காட்டுமெனக் கூறும் பட்டாசாரியரையும் மறுத்து, வேள்வி முதலாயின எல்லாம் அழிதன் மாலையவாய காரியங்களைப் பயப்பனவன்றித் தத்துவ ஞானத்தைப் பயவா என்றற்கு அவற்றை விதித்த நூல்களே சான்று எனவும், அவை ஞானத்தைப் பயவாமை மாத்திரையேயன்றித் தீவினைபோல் அது நிகழவொட்டாது தடைசெய்து நிற்றலும் உடையது எனவும், அவற்றது கழிவே ஈண்டைக்குக் காரணமாவது எனவுங்கூறி, படிமுறையான் பலபிறவிகளிற் செய்த சரியை கிரியா யோகங்களாகிய

தவத்தானே, வீட்டிற்கு நெறியென அவ்வச் சமயத்தாராற்கூறப்படுவன அனைத்தும் தன்கண்ணே வந்து கூட நின்ற பெருநெறியாகிய குரவன் உணர்த்தியவாறு சிவஞானங் கண்ணாகக்கொண்டு அறிவதாகிய ஞான நன்னெறியை அவ்வுயிர் அடையுமென வலியுறுத்தியது.

2. உயிருக்குச் சற்குருவாய் வருவது அரனே. (26)

மலபரிபாகஞ் சத்திநிபாதம் நிகழ்ந்து தத்துவ ஞானத்தின் அவாவுதலையுடைய ஆன்மாவுக்கு, இதுகாறுந்தனக்கு முதலாய் உள் நின்று உணர்த்திவந்த பரம்பொருளே, அப்பருவம் அறிந்து குருமூர்த்தமாய் எழுந்தருளிவந்து ஞானத்தை அறிவுறுக்கும் என்பதனை வலியுறுத்தி, சாங்கியர் நையாயிகர் முதலியோரை மறுத்தது.

இ-ள். அத்தகைய ஞானத்தை உணர்த்துவார், கலைஞானங்களை உணர்த்துவாரைப்போல நம்மனோரில் ஒருவராதல் அமையும் எனக்கூறும் சாங்கியர் நையாயிகர் முதலியோரை மறுத்து, மேற்கூறியவாற்றாற் சரியை கிரியா யோகங்கள் மூன்றும் முற்றியபின்னர், இம்முற்றுதலானே மலபரிபாகம் சத்திநிபாதம் நிகழ்ந்து, தத்துவ ஞானத்தின் அவாவுதலையுடைய உயிர்கட்கு, இதுகாறுந்தமக்குமுதலாய்உள்நின்று உணர்த்தி வந்த பரம்பொருளே அப்பருவம் அறிந்து குரு

மூர்த்தமாய் எழுந்தருளிவந்து, அத் தத்துவ ஞானத்தை உணர்த்தும் என வலியுறுத்தியது.

3. உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினாலே தன்னையும் அறியமாட்டாது. (27)

*ஆன்மாக்கள் ஐம்பொறிகளான் மயங்கித் தம்மையுணராமையின், தமது முதலே குருமூர்த்தமாய் எழுந்தருள வேண்டும் என்பதனை வலியுறுத்தி சிவசங்கிராந்தவாத சைவரை மறுத்தது.*

இ-ள். விடயஞானத்தை விளக்கும் ஐம்பொறிகளே தத்துவ ஞானத்தை விளக்குதற்கும் அமையும், தம்முதல் குருவுமாதல் வேண்டா எனவும், அறிவை விளக்குங் கருவிகளால் மயக்கம் நிகழ்வதில்லை யெனவும், நிகழுமாயின், அவ்விந்திரியங்கள் உள்வழித் தம்முதல் குருவுமாய் உணர்த்தினும் உணர்தல் செல்லாது எனவும் கூறும் சிவசங்கிராந்தவாத சைவரை மறுத்து, படிகத்தின் வைத்த பலவேறு வகைப்பட்ட நிறங்கள் அப்படிக வொளியைக் கீழ்ப்படுத்துத் தத்தம் இயல்பினையே விளக்கி நிற்குமாறுபோல, அவ்வைம் பொறிகடாம் ஆன்ம சொரூபத்தைக் கீழ்ப்படுத்துத், தம்மாற் காட்டப்பட்ட தத்தம் விடயமாத்திரையே சார்ந்ததன் வண்ணமாந் தன்மையவான அவ்வான்மாவுக்குக் காட்டிநிற்பன வாகலான், உணர்த்த உணரும் இயல்பினை

யுடைய உயிர்கள் ஐம்பொறிகளால் மயக்கமுற்றுத் தமது சொரூபத்தை அறியாவென வலியுறுத்தி, தன்னாற் சாரப்பட்ட இந்திரியங்களின் இயல்பையே சார்ந்ததன் வண்ணமாந் தன்மாட்டுப் பெற்று நிற்குந் தனது பொதுவியல்பை முன்னர்ச் சிந்தித்து அறிந்துகொண்டு, பின்பு, அந்நிறங்கள் படிகத்துக்கு வேறென்று அறியுமாறு போலப், பலவகை இயல்புடைய பொதுவியல்பைச் செய்யும் பொறிகளைத் தன்னின் வேறு எனத்தெளிந்து, அவ்வசத்தாகிய பொறிகளுக்கு வேருகிய சிவசத்தினது இயல்பு தன்மாட்டு விளங்கச் செய்யும் ஆகலின், அச்சிவசத்துக்கு அடிமையாம் எனச்சாதித்தது.

உயிர் பஞ்சேந்திரியங்களிலே ப்ற்றற்றல் தன்னையும் அறியும். (28)

வியாபகப்பொருட்கு காட்சி விசேடமே நீக்கமாகலின், ஆன்மாத் தன்னை ஐம்பொறிகளின் வேறெனக் காணவே, தமது முதல் திருவடியைத் தலைக்கூடப்பெறும் என வலியுறுத்தி, பேதவாத சைவரையும், சிவாத்துவித சைவரையும் மறுத்தது.

இ-ள். பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய் பொய்யாக மெய் கண்டார்க்கு, அதுவே அமையும்; கருவிகள் நீங்கியவழிச் செய்யக் கடவதொரு முயற்சி கூடாமையின், ஆண்டு மெய்ப்பொருட்கு

அடிமையாதல் பெறப்படாதென்றும், கருவிகள் நீங்கின வழி வேறு நில்லாது சிவத்தைத் தலைப் படுமாயின், அவ்வுயிர்க்கும் கருவிகள் நீங்கிக்கேவ லத்தைத் தலைப்பட்ட உயிர்க்குப்போல மீட்சி உண்டுபோலும் என்றும் கூறும் பேதவாத சைவ ரையும், எல்லாஞ் சிவமாகக் கண்டார்க்கு மீண் டால் என் ? மீளாக்கால் என் ? என்னுஞ் சிவாத் துவித சைவரையும் மறுத்து, வியாபகப் பொருட் குக் காட்சி விசேடமே நீக்கமாகலின், ஐபுணர் வுகளான் மயங்கித் தன்னை உணராதெனப்பட்ட ஆன்மா, சித்தாய் வியாபகமாகிய தன்னியல் பை சடமாய் ஏகதேசமாகிய இந்திரியத்தின் வேருக உணரும் வியாபக உணர்விற்கு இந்திரி யத்தான் ஆகக்கடவ தொன்றின்மையின், சய் குரவனால் அவ்வாறு உணரவே, பிறிதுகாரணம் வே[illegible]ாது, தனக்கு ஆதாரமாகிய முதல் வனது திருவடியினை அணையும் எனவும்; மலசத் திக்குக் கேடு உண்மையின் அதனைத் தலைப்பட்ட உயிருக்குக் கருவிகளின் மீட்சி கூடும், சிவசத்திக்கு அஃது இன்மையின் அதனைத் தலைப்பட்ட உயிர் அவ்வாறு மீளுதற்கு ஓரியைபு இல்லையெனவும் சிவமாயவழியும்புலனுணர்வு ஏகதேசவிளக்கமாவ தன்றி உயிருணர்வு போலவியாபக விளக்கமாதல் இல்லையாகலான், இதன்கண் மீளுதல் இழுக்கா

மெனவும், பயிற்சி வயத்தான் ஒரோ வழி மீள வருமாயின், மீளாதவாறு நீங்காமை நினைந்து நீங்கு எனவும் கூறி, இவ்வான்மா தன்னை ஐம் பொறிகளின் வேறெனக் காணவே, தனது முதல்வன் திருவடியை அணையும் என வலியுறுத்தியது.

---

## ஒன்பதாஞ் சூத்திரம்.

1. உயிர் அரன் ஞானத்தினாலேயே அரனைக்காணும். (29)

மேற்கூறிப்போந்த சிவம் வாக்கு மனாதீத கோசரமாகலின், அதனை அச்சிவஞானத்தானே உணர வேண்டுமென வலியுறுத்தி, சிவசமவாத சைவரை மறுத்தது.

இ-ள். முதல்வன் பாச அறிவால் நாடப் படுவ னல்லனாயினும், பசு அறிவால் நாடப்படு வன் என்றற்கு இழுக்கென்னை எனவும், பசுத்து வம் நீங்கியவழிச் சுட்டிறந் தறிவதாகிய உயி ருணர்வு திருவடி ஞானத்தோடு ஒப்பதாகலின், அதன்கட் கோசரமாதல் அமைவுடைத் தென வும், எதிர்முகத்துப் பொருளைக் கண்ட கண்ணை மறித்து நோக்கிய வழி வெரிந்புறத்துப் பொரு ளையுங்காண வல்லும், அதுபோல தேர்ந்தறி தலைச் செய்த உயிரே தெளிந்தறிதலையுஞ் செய்ய வல்லு மெனவுங் கூறுஞ் சிவசமவாத சைவரை

மறுத்து, முதல்வன் வாக்கு மனதீத கோசரமாய் நிற்றலான், தம்மை அறியுமாறு உணர்த்தும் முகத்தானே, தலைவனை அறிந்தபின் அறியப்படுவதாகிய தம்மறிவுகொண்டு தலைவனை அறியுமாறு யாண்டையது எனவும், கண்ணுக்கு உயிர் மறைந்து நின்றே காட்டுவதாகலான் அது தன்னையும் உயிரையும் அறியமாட்டாதாயிற்று, அதுபோல முதல்வன் இதுகாறும் மறைந்து நின்றே உணர்த்துதலின், உயிர் தன்னையும் முதல்வனையும் அறியமாட்டாதாயிற்று எனவும் கூறி, அத்தைதர்ச்சியறிவின் கண்ணும் உடனாய் நிற்குங் கள்வன் அம்முதல்வன் ஆகலானே, அவனைச் சிவஞானங் கண்ணுகக் காண்க என வலியுறுத்தியது.

**2. உயிர் பாசத்திலே பற்றற்றல், அான் வெளிப்படுவன். (30)**

நிலையுதலையுடைய ஞான சொரூபத்தைக் காட்டாது மறைத்து நிற்கும் நிலையுதலிலவாயுள்ள காரியப் பிரபஞ்சத்தினியல்பை விவேகித்தறியின், அவ்வழி நிராலம்பமாய் விளங்கித்தோன்றும் அச்சிவஞான சொரூபமென்று வலியுறுத்தி மாயாவாதியை மறுத்தது.

இ-ள். முதல்வனைச் சிவஞானக்கண்ணாலே காண்க என்று உணர்த்தியவழி, அந்தஞானக்

கண்ணைப் பெறுமாறு யாங்ஙனம்? என்பார்க்கு, அசத்தை அசத்தெனக்கண்டு ஒருவுக என்புழி, அங்ஙனம் அசத்தை அசத்தெனக்கண்டு ஒருவிய வழித், தோன்றுவது சூனியமே அன்றிப் பிறி தில்லையெனும் மாயாவாதியை மறுத்து, படிக சொரூபத்தைக் காட்டாது மறைத்து நின்ற வேற்று நிறங்களை, இவை நிலையுத லிலவாகிய வேற்று நிறங்களெனக் கண்டு நிற்பின், அவ்வழி நிலையுத லுடைத்தாய் விளங்கி நிற்பது பளிங் கினது சொரூபமாம், அதுபோல நிலையுத லுடைய தற்சொரூபத்தைக்காட்டாது மறைத்து நிற்கும் நிலையுத லிலவாயுள்ள பிரபஞ்சத்தை, இவை நிலையுதலுடையன வல்ல என்று விவே கித்து அறியின், பயின்றறிந்து வருந் தனது சுட் டறிவின் அளவினைக் கடத்தலான் இன்னதென்று அறிய வாராத சூனியப் பொருள் போலத் தோன்றி, சுட்டிறந்து அறியும் அறிவின் கண் நீங்காது நிலைபெறுவதாய்ச் "சோதிக்குட் சோதியாய்" விளங்கித் தோன்றுமெனக்கூறி, அசத்தை அசத்து என்று கண்டு ஒழியுமாறும், ஒழிந்தவழி உண்மையைத் தைவம்புணருமாறும், புணர்ந்தவழி அதனைற் பொய்விட்டுப்போமாறும் வலியுறுத்தியது.

3. பஞ்சாக்ஷரசேபம் பண்ணினால், வாசனாமலம் போம். (31)

*அங்ஙனம் பாசமொருவிய வழிப் பிரகாசித்த ஞானக்கண்ணாற் பதியைச் சிந்தை நாடியபின்னர், அவ்விடத்து ஸ்ரீ பஞ்சாட்சரத்தையும் விதிப்படி தியானிக்க வேண்டுமென வலியுறுத்துகின்றது.*

இ-ள். ஆன்மாவைச் சுத்தி பண்ணுதற்குப் பாசம் ஒருவிய வழித் தண்ணிழலாய்ப் பிரகாசித்த ஞானசொரூபம் ஒன்றே அமையுமாகலின், இவ்விடத்தில் இனிச் செய்யக்கடவதொன்றில்லை என்பாரை மறுத்து, வேம்புதின்ற புழு அதனை ஒருவிக் கரும்பைத் தலைப்பட்டு அதன் சுவை தெரிந்துழியும், பயிற்சி வயத்தான் நோக்கிற்றை நோக்கி நிற்குமாறு போல, அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்று கண்ட உயிர்களுக்கு, அதனான் ஞானசொரூபம் விளங்கி ஞேயங்காட்சிப் பட்ட விடத்தும், அவை பயிற்சி வயத்தான் ஏகதேசப்பட்டுப் புறத்திற் செல்ல நோக்குவதாய தம் அறிவை அங்ஙனம் ஆகாதவாறு மடக்கி, அகத்தே ஒரு குறியின்கண் நிறுத்தி நிட்டை கூடும்படி அஞ்செழுத்தோதும் முறையில் வைத்துக் கண்டு சிந்திக்கச் சிந்திக்க, அஃது அந்நோக்கத்தைப் பற்றறக் கெடுத்து

ஞானசொரூபத்தை இனிது விளக்கிப், பூரண நிலையிற்கொண்டு செலுத்துமாகலின், இவ்விடத்து ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க என்று வலியுறுத்தியது.

---

## IV. பயனியல்.

### பத்தாஞ் சூத்திரம்.

**1. அரனுடன் ஒன்றாகி நில்.** (32)

சிவத்தோடு ஏகனாகி ஒற்றுமைப்பட்டு நிற்கவே, யான் எனதென்னுஞ் செருக்கற்று சிவஞானத்தைப் பெறுமென வலியுறுத்தி, சிவசமவாத சைவரை மறுத்து, ஆணவமல நீக்கத்தைச் சாதித்தது.

இ-ள். ஞானம் பிரகாசித்து முதற்பொருளைக் கண்டன் மாத்திரையே வீடு பேற்றிற்கு அமையும் எனுஞ் சிவசமவாத சைவரை மறுத்து, ஞானக்கண்ணாற் காணப்பட்ட அம் முதல்வன் பெத்த நிலையில் உடனாய் நின்று அறியவும், வேறு காணப்படுமாறின்றி யானே அறிந்தேன் என்னும்படி உயிர் தானேயாய் ஒற்றுமைப்பட்டு உயிரின் வழி நின்ற முறைமைபோல, ஈண்டு உயிர் அம்முதல்வனோடு ஒற்றுமைப்பட்டு நின்றால் யானும் எனதும் எனப் பகுத்து நிற்கும் மயக்க வுணர்விற்கு ஏதுவாய மலம் நீங்கி, அம்

முதல்வனது திருவடியாகிய சிவானந்தத்தைப் பெறுமாகலான், "ஈண்டுப் பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத்து ஏகனாகி நிற்க" என வலியுறுத்தியது.

## 2. உள்ளொழிலெல்லாம் அரன் பணி என்று கோள். (33)

தன்செய்திக்கு முதல்வன் செய்தியை இன்றி அமையாத ஆன்மா, செய்வன வெல்லாம் அவனருளின் வழி சலியாது நிலைபெற்று நின்று செய்யுமாயின், மாயையின் காரியமாகிய மயக்கம் வந்து தாக்காதென வலியுறுத்தி, சுத்த சைவர் முதலியோரை மறுத்து, பிராரத்தகன்மம் மாயேயம் எனும் மலங்களின் நீக்கத்தைச் சாதித்தது.

இ-ள். உடம்பு நிற்குங்காறும் அதுகொண்ட வினைப்பயனும் அதனை அனுபவித்தற்குத் துணைக்காரணமாய் உடனிற்கும் முயற்சியும் ஒருவாற்றானும் நீக்கலாகாமையின், அவை அவ்வழி ஏகனாகி நிற்றற்குத் தடையாகுமே எனக் கூறுஞ் சுத்த சைவ ரீருயினாரை மறுத்து, தன் செய்திக்கு முதல்வன் செய்தியை இன்றி அமையாத ஆன்மா செய்வனவெல்லாம் அவனருளின் வழி நின்று செய்யுமாயின், மாயேயமுங் கன்மமும் ஏகனாகி நிற்றற்குத் தடையாய் வந்து தாக்கா ஆகலான், அவை தாக்காமை பொருட்டு, அம்

முதல்வன் அருள்வழி சலியாமல் நிலை நிற்க என்று கூறி பெத்தநீக்கத்தை வலியுறுத்தியது.

---

## பதினொன்றாஞ் சூத்திரம்.

1. ஞானிக்கு வருகிற விடயங்களை அரனே அநுபவிப்பன். (34)

ஆன்மா ஒன்றனை விடயிக்குங்கால் முதல்வன் செய்யும் உபகாரத்தைக் கூறுமுகத்தானே அத்துவித நிலையை வலியுறுத்தி, ஈசுரவவிகாரவாதி முதலியோரை மறுத்து, பிராரத்த வினைத்தொடர்பாகிய வாசனை நீக்கத்தைச் சாதித்தது.

இ-ள். முதல்வன் உயிர்கட்குக் காட்டும் உபகார மாத்திரையே உள்ளவன் என்னும் ஈசுர வவிகாரவாதி முதலியோரையும், முதல்வனுந் தன்னனந்தத்தை அநுபவிப்பன்என்னும் சிவாத்துவித சைவரையும் மறுத்து, விளக்கொளி கண்ணொளியோடு கூட உருவத்தினுங் கலந்தாலன்றி அஃது அவ்வுருவத்தைக் காண்ட லின்றாயவாறு போல, அறிவிக்க அறியும் இயல்பினவாய உயிர்களும், முதல்வனதுணர்வு தம்மோடு விரவி நின்று தம்மோடு கூடச்சென்று விடயத்தினும் விரவி நின்றால் அறிவு விளங்கி அதனையறியும் இயல்பினவன்றித் தனித்து அமையவும் மாட்டா, தனித்து ஒன்றனை விடயிக்கவும் மாட்டா வாக

லான், அறிவு விளங்குதன் மாத்திரைக்கே அன்றி விடயத்தைப் பற்றுதற் கண்ணும் முதல்வன் உடனின்றறிதல் ஒரு தலையான் வேண்டப்படுத லான், முதல்வனும் உயிர்களான் உணரப்படும் விடயங்களை உடனின்று உணருவன் எனக் கூறி, சித்தாந்த முத்தியை நிலைபெறுத்துஞ் சுத்தாத் துவித நிலையை வலியுறுத்தியது.

2. அரனை மறவாத அன்பு இருந்தால் அவனிடத்திலே ஐக்கியமாய்ப் போவன். (35)

ஆன்மாவின் இச்சாஞானக் கிரியைகள் மூன்றும் அருள்வழி நின்றாலன்றிப் பரபோகவிளைவு கூடா தென்பதனை வலியுறுத்தி, இதற்கு மாறாய சமயத் தாரை மறுத்தது.

இ-ள். ஏகமாகி நின்றார்க்கு அவ்வினையுபு பற்றி அறிவிச்சை செயல்கண் மூன்றும் ஆண்டு விடயிக்குமாறு யாங்ஙனம்? என்றும், அரன் கழல் சேறல் உடம்பி னீங்கியபின் னன்றி உடம் புடைய வழியுங் கூடுமாயின், அது ஞாயிற்றி னொளிபோல மருங்குள்ளார்க்குப் புலனாதல் வேண்டுமென்றும் இவ்வாறு பல்வகையாக முர ணிக்கூறும் வாதிகளை மறுத்து, பரமுத்தியின் கண் இச்சை நிகழாதவழிச் சிவபோகம் அநுபவ மாதல் செல்லாமையானும், முதல்வன் வேறுநில் லாது செய்வோர் செய்வனவற்றை அறிந்து அவ்

வச்செய்திக்குத் தக்கபயனை, மிகச்செய்யலாயின் அவ்வப்பொழுதே விளைவித்தும், அல்லுழிக் காலாந்தரத்தில் விளைவித்தும் உடனாய் நிற்பனாகலானும், ஞாயிறு எல்லார்க்கும் ஒப்ப நிற்பினும், அது காட்சியுடையார் கண்ணுக்கன்றி அஃதில்லாதார் கண்ணுக்கு இரவின் கண்ணதாகிய இருளேயாம், அதுபோல முதல்வன் எங்கணும் ஒப்ப நிற்பினும், ஏனையோர் போல் உடம்போடு நிற்பினும் பருவமுடையராய்ப் பத்தியினாற் றன்னை மறவாது உணர்வார்க்கு தனது திருவருட் பார்வையாற் பாசத்தை நீக்கி அறிவை அலர்த்தும் ஆகலான், உடம்புள் வழியும் அவர் பாசத்தா ரல்லராகலின், அத்தகைய சீவன் முத்தர்க்கன்றி மலமுடையார்க்கு அவன் அம்மலத்தின் கண்ணே யாவன் எனக்கூறி, பத்தியினான் மறவாது ஏத்த முதல்வனது சீபாதங்களை அணையும் எனமொழிந்து, சிவப்பேற்றை வலியுறுத்தியது.

---

## பன்னிரண்டாஞ் சூத்திரம்.

1. மும்மலங்களையுங் களைக. (36)

*ஆணவ மாயை கான்மியமென்னும் மும்மலங்களும் அஞ்ஞானத்திற்கு ஏதுவாய் பயிர்சிவயத்தான் வந்து நுழையுமாறும், அஃது சீவன் முத்தர்க்கு ஆகா*

மையுந் தெரித்துணர்த்தி, அவைகளைக் களைக என வலியுறுத்தியது.

இ-ள். அயராவன்பின் அரன்கழல் சென்ற சீவன்முத்தர் மாட்டும், சீவன்முத்தி நிலைக்கண் ஆணவ மாயை காம்மிய மலங்கள் பயிற்சிவசத்தான் அஞ்ஞானத்திற்கு ஏதுவாய் யாதாவதொரோராற்றால் நுழைந்து அவரது மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்கு வித்தாகிய பண்ணிட விபரீத வுணர்வை மேற்படுத்து மாகலான், அங்ஙனம் நிகழ்ந்த வழி இவ்வஞ்ஞானம் ஏகதேசக் காட்சியான் ஆயதெனவும், அக்காட்சி விருப்பு வெறுப்புக்களது தோற்றத்தான் ஆயதெனவும், அத்தோற்றமும் பிராரத்தவினை நுகர்ச்சிக்கட் சென்ற தற்போதத்தால் ஆயதெனவும் அறிந்து, அங்ஙனஞ் செல்வதாகிய தற்போதம் முனையாத வாறு பரிகரித்துச், சிவஞானத்துடன் அடங்கிச், சிவாநுபவம் சுவாநுபூதிகமாம்படி ஞான நிலையில் உறைத்து நிற்கும் முறையான், அம் மும்மலங்களையும் களைக என வலியுறுத்தியது.

2. சிவஞானிகளுடனே கூடுக. (37)

அஞ்ஞானத்தை யுணர்த்து மவரோடு இணங்காது, சிவாநுபவம் நிலைபெறுதற் பொருட்டுச் சிவபத்தர்களோடு இணங்குக என வலியுறுத்தியது.

இ-ள். உறவும் பகையும் ஒழித்த மெய்ஞ் ஞானிகள் சிலர்மாட்டு நட்பும், சிலர்மாட்டு நட்பின்மையும் உடையராதல் சால்பன்று என்பாரை மறுத்து, மும்மலங்கள் அஞ்ஞானத்தை உணர்த்துதல் இலக்கு வாய்த்துழி ஏதுவாதன் மாத்திரையே எனவும், சிவபத்தரல்லாதார் அவ்வாறின்றி இலக்கு வாயாத வழியும் வாய்க்குமாறு செய்துகொண்டு, பலவகை உபாயங்களாலுந் தம்மோடொப்பச் சுட்டியுணர்வதாகிய விபரீத வுணர்வைச் செலுத்தியே விடுவர் எனவும், ஆகலான் அம்மலங்களினுங் கொடியராகிய இவரை அவற்றினும் அஞ்சி விட்டொழிதலே அறிவுடைமைக்குச் சால்பு எனவும் கூறி, அத்தகையாரோடு தொன்று தொட்டுப் பயின்று வந்த தேர்ச்சி அறும்படி, தமக்குப் பிராரத்த வயத்தான் நேரும் மறவியை மாற்றி, ஞானக் கண்ணை உதவி, நன்னெறிக்கட் செலுத்தி வாழ்விக்கும் முதல்வன் அருள்வழி நிற்கின்ற சீவன் முத்தர்களாகிய சிவபத்தர்களோடு இணங்குக என வலியுறுத்தியது.

3. சிவஞானிகளையும் சிவலிங்கத்தையும் சிவனெனவே தேறிவழிபடுக. (38)

அன்பரோடு மரீஇயினர்க்கு அம்மருவுதல் நிலை பெறுதற் பொருட்டு அவர் சிவ பத்தரது திருவேடத்

தையும் சிவாலயத்தையும் சிவபெருமானே யெனக் கண்டு வழிபடுக என வலியுறுத்தியது.

இ-ள். சிவபத்தர்களோடு உண்டாகிய இணக்கம் நிலைத்தற்பொருட்டு, வாக்கு மனாதீதமாய் நின்ற பரம்பொருள் உலகத்தார் தன்னை அறியும்படி கருணை செய்து தனது வேடமாகிய திருநீறு உருத்திராக்கம் முதலிய தனது வடிவத்தைக் தன்னன்பர்க்குக் கொடுத்து அவர்களிடமாக நின்று அங்கங்கே அறிவை விளக்குதலானும், விறகிற் றீயானது அதனைக்கடைந்துழி வேறாய் விளங்கும் அல்லுழி விளங்குவதன்றாகலான் அதுபோல உயிர்கட்குப் புத்தி முத்தி அளித்தற்பொருட்டுக் காணப்பட்ட தாவரத் திருவுருவின்கட் கலப்பினால் அதுவே தானாய் அதுவன்றி வேறு பொருளுமாம் இயல்புடைய முதல்வன், அதுவே தானாய்க் காணப்பெறும் உண்மைத்தவமுடையார்க்கு எப்போதும் அதன் மாட்டு விளங்கித் தோன்றுமாகலானும், அம் முதல்வன் பாலின் நெய்போல் மறைந்து எங்கணும் வியாபகமாய் நிற்பினும், தயிரின் நெய் போல விளங்கி நிற்கு மிடங்களாகிய சிவபத்தரது திருவேடத்தையும், சிவாலயத்தையும் சிவனெனவே தேறி வழிபடுக என வலியுறுத்தியது

4. வழிபடாமையை ஒழிக. (39)

*பிராரத்தவாதனை பற்றறக் கழிதற்பொருட்டும் முதல்வன் தான்றானுச் செய்தளித்த நன்னெறியை மறவாதிருத்தற்பொருட்டும் சிவஞானிகளையும் சிவாலயத்தையும் வழிபடுக என மீண்டும் வலியுறுத்தியது.*

*இ-ள். உடம்பின் கண்ணதாகிய பிராரத்த வாசனை உயிர்க்குத் தாக்குவதாயுள்ள வளவும், அதனுனேவரும் விருப்புவெறுப்புக்களும், அவை பற்றிக் காட்சிப்படும் மண்முதன் மாயைகளும், அவைபற்றி நிகழும் விபரீத வுணர்வும், ஆகிய அசத்துக்கள் ஒருவிய வழியும் வந்து கூடி மேற் படுவன வாகலான், இவற்றிற்கெல்லாம் மூலமாகிய பிராரத்த வினைவாசனை பற்றறக் கழிந்தாலன்றி அட்டுவித ஞானம் மேம்பட்டு நிகழாதாக லின், அது பற்றறக்கழிதற் பொருட்டும், தன் னுண்மையை அறிய மாட்டாது குருடாய்க் கிடந்த உயிர்க்குப் பலவாற்றானும் அதனைத் தெரித்துணர்த்தி எத்தனையு மெளிய அவ்வுயிரை எத்தனையு மரிய தானும் வண்ணஞ் செய்தளித்த பெரியதோருதவியை அதன் பின்னர் மறக்குமாயின், அஃது இதற்கு முன் அறியாமையான் மறந்த குற்றம் போலத் தீர்திறனுடைய குற்றமன் றாகலானும், முதல்வன் அங்ஙனம் தான்*

ருனேயாகச் செய்தாலும், இதுகாறும் தனக்குச் சுதந்தரமின்றி முதல்வனது உபகாரத்தை யின்றி அமையாதாய் அடிமையாகிய உயிர் எக் காலத்தும் அவ்வாறடிமையே யாமாகலானும், தான்ருணுச் செய்தளித்த அப்பெரியோன் மாட்டு நன்றி குன்ருதிருத்தற் பொருட்டும், சிவபத்த ரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் வழி படாமையை ஒழிக எனக்கூறி, வழிபாட்டை வலியுறுத்தியது.

## நூற்கருத்து.

---

உலகமானது தோற்றம் நிலை இறுதி எனும் முத்தொழில்களை யுடையது. அம்முத்தொழில் களுக்கும் மூன்று கருத்தர்களிருந்தாலும் படைப் புக் கருத்தா திதிக்கருத்தாவாகிய இருவர்களை யுஞ் சேர்த்துச் சங்கரிக்கும் சங்கார கருத் தாவே அம்முத்தொழில்களுக்கும் முதற்கடவுள்.

அம்முதற்கடவுள் உயிர்களிடத்து வேறறக் கலந்து நின்று, அவர்களின் வினைகளுக்கீடாகப் பிறந்திறக்கும்படிச் செய்யும் தனது ஆணையாகிய சிற்சத்தியுடன் நீக்க மின்றி நிற்பன்.

உயிரானது சூனியமன்றாய், உடல், பொறி, சூக்குமதேகம், பிராணவாயு, பிரமம், தத்துவ சமூகமெனும் இவைகளுக்கு வேறாய் உள்ளது,

அந்தக் கரணங்களுக்கு வேறாகிய அவ்வுயிர் சகசமாகிய ஆணவ மலத்தாற் கட்டுண்டு அறி விழந்து, சாக்கிராதி ஐந்தவத்தைகளை அடை யும்.

அத்தகைய உயிராலே தொழிற்படும் ஞானேந்திரியங்கள் தத்தம் விடயங்களை அறிந்தாலும் தம்மையும் தம்மை யதிட்டித்து நிற்கும் உயிரையும் அறியா. அங்ஙனமே உயிர்களும் தமதறிவிற்கு விளக்காயுள்ள முதல்வனது சிற்சத்தியாலே வினைப்பயன்களை அறிந்து அநுபவிக்கின்ற தம்மையும், தம்மைச் செலுத்தி நிற்கும் சிற்சத்தியாகிய அருளையும் அறியமாட்டா.

முதல்வன் அளந்தறியப்படும் பொருளாகில் அசத்தாம்; ஒருவாற்றானும் அறியப்படாத பொருளாகில் சூனியமாம்; ஆகலான் இவ்விரண்டுமன்றி, ஒருவாற்றான் அறியப்படாமையும், ஒருவாற்றான் அறியப்படுதலுமாகிய இரண்டு வகையானும் சிவசத்தாயுள்ள பொருளாம்.

சிவசத்தின் சந்நிதியில் உணருருவாகிய அசத்தெல்லாம் பாழேயாகலாற் சத்தாகிய சிவம் அசத்தாகிய பாசத்தை அறிந்து அநுபவியாது. அசத்தாகிய பாசம் அறிவில்லாத சடமாகலிற் சத்தாகிய சிவத்தை அறிந்து அநுபவியாது. சத்தும் அசத்துமாகிய அவ்விரண்டினையும் அறியுந் தன்மைத்தாய், அறிவிக்க அறியும் உபதேசியாய், அவ்விரண்டன்பாலும் அநுபவ அறிவுளது சதசத்தாயுள்ள ஆன்மாவாகும்.

ஐம்பொறிகளாகிய வேடர் சுழலிற் பட்டு அறிவிழந்து தன்னையும் தலைவனையும் அறியாது நிலைபெற்ற அவ்வான்மாவின் முன்னைய புண்ணிய மிகுதியால், இதுகாறும் அந்தரியாமியாய் உண்ணின்று உணர்த்திவந்த பரம்பொருளே குரு வடிவமுங் கொண்டெழுந்தருளிச் சிவதீக்கை செய்து "ஐம்பொறிகளாகிய வேடர்கள் கூட்டுறவால் நின்னை அறியாது மயங்கி பிடர்ப்பட்டாய், நின் பெருந்தகைமையானது இவ்வியல்பிற்று" என அறிவிக்க, அறிந்த மாத்திரையே அவ்வைம்பொறிகளைவிட்டு நீங்கி அநந்நியமாய் நிலைபெற்று முதல்வன் திருவடிகளை அவ்வான்மா அணையும்.

பசுஞான பாசஞானங்களான் அறியப்படாத முதல்வனைச் சிவஞான (பதிஞான)க் கண்ணானே தன்னறிவின்கண்ணே ஆராய்ந்தறிக. அப்பதிஞானத்தைப் பெறுமாறு யாங்ஙனமெனின்? நிலம் முதல் நாதமீறாகிய பாசக்கூட்டம் பேய்த்தேரினியல்பிற்றாய்க் கழிவதென்றறிந்து நீங்கவே, அப்பதிஞானம் வெளிப்பட்டு விளங்கும். அதனால், ஞேயத்தைக் கண்ட காட்சி சலியாமைப் பொருட்டு அப்பொருள்பயக்குந் திருவஞ்செழுத்து அவ்விதிப்படி அறிந்து கணிக்கப்படும்.

முதல்வன் உயிர்தானேயாய் ஒற்றுமைப் பட்டு உயிரின்வழி நின்ற அப்பெத்த நிலைபோல, இம்முத்தி நிலையில் உயிர் தானென வேறு காணப்படாது, அம்முதல்வனேயாம்படி ஒற்றுமைப்பட்டு அவ்விறை பணியின் வழுவாது நிற்பின், ஒருவிய வழியும் வாசனையால் வந்து தாக்கும் வலிய மலமாயா கன்மங்கள் பற்றறக் கழியும்.

கண்ணுக்கு உருவத்தைக் காட்டிக் காண்கின்ற ஆன்மாவைப்போல, முதல்வன் பிரிவற்று நின்று விடயத்தை ஆன்மாவுக்கு அறிவித்து அறிந்துவருதலான், அப்பெருங்கருணையை மறவாது செய்யும் அன்பானே, உயிர் அம்முதல்வன் திருவடியைத் தலைப்படும்.

அங்ஙனம் அயராவன்பின் அரன்கழலணைந்த சீவன்முத்தன், முதல்வனது திருவடியை அணைதற்கொட்டாது அயர்த்தலைச்செய்விக்கின்ற மும்மல வழுக்கை ஞான நீராற் கழுவி, அத்தகைய அன்பரொடு கூடி, அவரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் முதல்வனெனவே கண்டு வழிபட்டு வாழ்வான்.

சிவஞான போதச் சுருக்கம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிற்றம்பலம்.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்கு
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்.

